உ

சிவ சிவ

# வித்துவான் தேர்வு வினாவிடை

எண் - 1

# தொல்காப்பியம்
# எழுத்ததிகாரம்
# இளம்பூரணம்





ஆக்கியோன் :

மதுரகவி,
திருமுறைச்செம்மல், வித்துவான்,
தா. ம. வெள்ளைவாரணம்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.



உரிமை ஆசிரியர்க்கே ] 1962 [ விலை ரூ. 1/25.

உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
நிறுவிய தருமங்கள்

---

| என் | தரும விபரம் | | முதற்பொருள் |
|---|---|---|---|
| 1. | திருமுறை வளர்ச்சிக்கு 34 தருமங்கள் | ... | ரூ. 10,07,200 |
| 2. | கல்வி அபிவிருத்திக்கு 68 தருமங்கள் | ... | ரூ. 27,26,125 |
| 3. | சைவ சித்தாந்தம் பரப்ப 7 தருமங்கள் | ... | ரூ. 1,56,000 |
| 4. | அன்னதானம் செய்ய 125 தருமங்கள் | ... | ரூ. 22,39,800 |
| 5. | வைத்தியம் செய்ய 6 தருமங்கள் | ... | ரூ. 4,23,500 |
| 6. | பொதுத்தருமங்கள் : (ஸ்நான கட்டம், அகதிகள் நன்கொடை, தண்ணீர்ப் பந்தல், ஒளிவளர் விளக்கு, பசுப்பரிசு, கோசம்வர்த்தனம், படிக்காசு நிதி, கல்லெழுத்து முதலியன) 76 தருமங்கள் | ... | ரூ. 10,52,390 |
| | ஆகத் தருமங்கள் 316க்கு | ... | ரூ. 76,05,015 |

# முன்னுரை

தமிழன்பர்களே! மாணவர்களே! நன்கு கற்றுத் திறம்படைத்த மாணவர்களாய் இருப்பவர்களில் சிலர் தேர்வு எழுதுங்கால் சிறந்த தகுதி பெருமல் போய்விடுகின்ருர்கள் என்பது ஏன்? 'வினக்கள் எவ்வெவ்வாறு வரும்; விடைகள் எவ்வெவ்வாறு எழுதவேண்டும்' என்பதை அறியாமல் இருப்பதே இதற்குக் காரணம். பல பகுதிகளேயும் நன்கு கற்று மனப்பாடம் செய்திருக்கும் திறத்தால், வினவிற்கு உரிய பகுதியை மட்டுமேயன்றி வேண்டாத பகுதிகளேயும் ஒன்று விடாமல் சிலர் எழுதிவிடுகின்ருர்கள். வின ஒரு புறம் இருக்கத் தாம் கற்றறிந்த பிறிதொன்றை அதற்கேற்ற விடை என்பதாகச் சிலர் எழுதிவிடுகின்ருர்கள். மற்றும் பலர் தம் பாடப் பகுதியை மட்டுமே கற்றறிந்திருப்பதால் ஆய்வுரைகளாகக் கேட்கப்படும் வினக்களுக்கு விடையளிக்க முடியாமல் நின்றுவிடுகிருர்கள். பல்கலேக்கழகத் தேர்வுகளில் வினவப்பெறும் வினக்களே உற்று நோக்கும் மாணவர்கள், தமது பாடப்பகுதியை மட்டும் கற்ருல் போதாது என்பதையும் மற்றும் பல ஆய்வுரைகளேயும் கற்கவேண்டும் என்பதையும் அறிவார்கள். (உதாரணத்திற்கு இந்நூலில் உள்ள 70-வது வினவிடையை நோக்குக.)

எனவே, நான் கல்லூரியில் பன்னிரண்டு ஆண்டுகளாகப் பாடம் சொல்லிய பழக்க அறிவினேக் கொண்டும், மாணவர்களின் நடைமுறையை நன்கு அறிந்தும், வினவிற்கேற்ப விடையளிக்கும் திறம் மாணவர்க்குப் பெருகவேண்டும் என்னும் நோக்கத்துடன் இந்நூலே வெளியிடுகின்றேன். வித்துவான் தேர்வு வினவிடை என்ற பெயரில் எண்–1 (தொல். எழுத்து. இளம்பூரணம்) இப்போது வெளிவருகின்றது. இந்நூலில் இளம்

பூரணர் உரையை அடிப்படையாகக் கொண்டு பிற ஆசிரியர்களின் உரைகளும் ஆய்வாளர்களின் கருத்துக்களும் இடம்பெறுகின்றன.

இந்நூலில் 122 வினாவிடைகள் கொடுக்கப் பெற்றுள்ளன. மாணவர்கள், 'இவைகளைத் தவிர வேறு வினாக்கள் இல்லை' என்பதாக எண்ணிவிடக் கூடாது. பெரும்பாலும் இன்றியமையாத வினாக்களையும், பலகலைக்கழகத் தேர்வுகளில் வினாவப் பெற்ற வினாக்களையும் குறிப்பிட்டிருக்கிறேன். (ஷை தேர்வு வினாக்களின் இறுதியில் அவ்வினா வினாவப்பெற்ற ஆண்டு பிறைக் குறியுள் கொடுக்கப் பட்டுள்ளது.) மாணவர்கள் இவ்வினாவிடை நூலைக் கற்றறிவதோடு பிற வினாவிடைகளையும் கற்றறியக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள்.

மற்றும் வித்துவான் தேர்வு வினாவிடை எண்–2 (தொல். சொல். சேனாவரையம்), எண்–3 (தொல். பொருள். இளம்பூரணம்) எனப் பல எண்கள் தொடர்ந்து வெளிவரும். அதற்குத் திருவருள் முன்னிற்பதாகுக.

இந்நூலை வெளியிடும் அளவுக்கு என்னை ஆளாக்கிவிட்ட எனது ஆசிரியப் பெருமகனாகத் திகழ்கின்ற சிவநெறிச்செல்வர், வித்துவான் திரு. K. M. வேங்கடராமையா, M. A., B. O. L., (செந்தமிழ்க் கல்லூரி பிரின்ஸ்பால்) அவர்களுக்கு என்னுடைய நன்றி என்றென்றும் உரியது.

மன்னு உலகத்து மன்னிய புகழ்பெற்று விளங்கும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களின் திருவடித் தாமரைகளுக்கு அடியேனது வணக்கத்தையும் நன்றியையும் திசைநோக்கி வணங்கித் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

திருப்பனந்தாள்
21—1—1962

இங்ஙனம்,
தா. ம. வெள்ளைவாரணம்.

உ
சிவ சிவ

# வித்துவான் தேர்வு வினவிடை

**எண் : 1**

## தொல். எழுத்து. இளம்பூரணம்

1. தொல்காப்பியத்துக்கு முந்துநூல் அகத்தியம் மட்டுமன்று; வேறு பலவுமாம் — என்பதனை ஆதாரங்காட்டி நிறுவுக. (1961)

தொல்காப்பியனாரின் ஆசிரியர் அகத்தியர் என்பவாகலின் தொல்காப்பியத்துக்கு முந்துநூல் அகத்தியம் என்பது வெளிப்படை. இனித் தொல்காப்பிய எழுத்ததிகாரச் சிறப்புப் பாயிரத்தில் பனம்பாரனர் "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என்று குறிப்பிடுகின்றார். இதனால் ஐந்திரம் என்பதும் முந்துநூல் என்பது பெறப்படும். மற்றும், அச்சிறப்புப்பாயிரத்தில் "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்து வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி" என்று வருவதனால் தமிழ்கூறும் நல்லுலகம் செய்த செய்யுள் நூலும் முந்துநூல் எனப்படும்.

மேலும், நச்சினார்க்கினியர் முந்துநூல் என்பதற்கு விளக்கம் தரும்போது, "அகத்தியமும் மாபுராணமும் பூதபுராணமும் இசைநுணுக்கமும்" என்று எழுதி உள்ளார். இதனால் மாபுரானம், பூதபுரானம், இசை நுணுக்கம் என்பனவும் முந்துநூல் என்பது விளங்கும்.

தொல்காப்பியர் தமது நூற்பாக்களில், "என்ப; என்மனார் புலவர்; மொழிப; நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு; நரம்பின் மறைய என்மனார் புலவர்; அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே" என்று கூறும் தொடர்களால் பல முந்துநூல்கள் இருந்தன என்பது விளங்கும். (இவற்றுள், நரம்பின் மறை, அந்தணர் மறை என்பன பிறன் கோட்கூறலுக்காக வந்துள்ளன.)

எனவே, தொல்காப்பியத்துக்கு முந்துநூல் அகத்தியம் மட்டுமன்றி ஐந்திரம், மாபுராணம், பூதபுராணம், இசை நுணுக்கம் போன்ற பல நூல்களும் உண்டு என்பது புலனாகின்றது.

## 2. தொல்காப்பியப் பாயிரத்தால் அறிய வருவன என்ன?

(அ) தொல்காப்பியர் ஐந்திர இலக்கண நூலைக் கற்றவர்; பழைய காப்பியக்குடியில் பிறந்தவர்; புகழ் நிரம்பியவர்; தவ ஒழுக்கம் உடையவர்; வடக்கண் வேங்கடமும் தெற்கண் குமரியும் எல்லையாக உடைய தமிழ் நாட்டில் தமிழ் கூறும் நன்மக்களது வழக்கத்தையும் செய்யுளையும் அடியாகக் கொண்டு எழுத்தையும் சொல்லையும் பொருளையும் ஆராய்ந்தவர்; அவற்றோடு முந்துநூல்களையும் கண்டு முறைப்பட எண்ணியவர்; மயங்கா மரபினால் எழுத்திலக்கணம் காட்டியவர்; அதனை நிலந்தருதிருவின் பாண்டியன் அவையில் அரங்கேற்றியவர்.

(ஆ) அதங்கோட்டாசான் என்பவர் அறங்கரை நாவினர்; நான்மறையை முற்றக்கற்றவர்; (அதங்கோடென்னும் ஊரினர்;) தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்ட காலத்தில் அவையின்கண் இருந்து அதன்கண் பல கடாக்களை எழுப்பினவர்.

(இ) தொல்காப்பியரும், அதங்கோட்டாசானும் நிலந்தருதிருவின் பாண்டியன் காலத்திருந்தவர்கள்.

— என்பன போன்ற செய்திகள் தொல்காப்பியத்துக்குப் பனம்பாரனார் கொடுத்த பாயிரத்தால் அறிய வருகின்றன.

3. பாயிரங்கேட்டல் பயனுடைத்தாமாறு யாங்ஙனம்?

பாயிரம், கற்றுவல்ல கணவற்குக் கற்புடையாள் போல இன்றியமையாச் சிறப்பிற்றாயும், திருவமைந்த மாநகரத்திற்கு உருவமைந்த வாயின் மாடம்போல அலங்காரமாதற் சிறப்பிற்றாயும் வரும் சிறப்புக்களை உடையது. மற்றும், பாயிரம் கேளாதே நூல்கேட்கப்புகின் குறிச்சிபுக்க மான் போல மாணாக்கன் இடர்ப்படும். அவ்விடர்ப்பாட்டைப் பாயிரம் நீக்கும். எனவே, பாயிரம் கேட்டல் பயனுடைத்தாயிற்று.

4. வடவேங்கடம் தென்குமரி என்று எல்லை கூறியது ஏன்?

வடக்குத் தெற்கு என்பவற்றுள் வடக்கு மங்கலந்திசையாகலின் முற்கூறப்பட்டது. கடல்கொள்வதன்முன் குமரிக்குத் தெற்கே பிறநாடும் இருந்தமையின் தெற்கும் எல்லையாகக் கூறப்பட்டது. (மேற்கும் கிழக்கும் கடலாகலின் எல்லை கூறார் ஆயினர்.)

வேங்கடமலை கேடிலதாகலானும், எல்லாரானும் அறியப்படுதலானும் (பிற இடங்கள் கூறப்படாமல்) இம்மலையே எல்லையாகக் கூறப்பட்டது. குமரியாறு தீர்த்தமாகலானும், எல்லாரானும் அறியப்படுதலானும் (பிற இடங்கள் கூறப்படாமல்) இவ்யாறே எல்லையாகக் கூறப்பட்டது.

5. "எழுத்தை எட்டுவகையானும் எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினர்" — எட்டும் எட்டிறந்த பலவகையும் யாவை?

## எழுத்தின் எட்டுவகை

1. இனைத்தென்றல் (தொகை)
2. இன்ன பெயர என்றல்
3. இன்ன முறைய என்றல்
4. இன்ன அளவின என்றல்
5. இன்ன பிறப்பின என்றல்
6. இன்ன புணர்ச்சிய என்றல்
7. இன்ன வடிவின என்றல்
8. இன்ன தன்மைய என்றல்

## எழுத்தின் எட்டிறந்த பலவகை

1. உண்மைத்தன்மை
2. குறைவு
3. கூட்டம்
4. பிரிவு
5. மயக்கம்
6. மொழியாக்கம்
7. நிலை
8. இனம்
9. ஒன்று பலவாதல்
10. திரிந்ததன் திரிபு
11. பிறிது
12. அதுவும் பிறிது
13. நிலையிற்று
14. நிலையாது
15. நிலையிற்றும் நிலையாதும்

**6. எழுத்து எட்டுவகையாக உணர்த்தப் பட்டதற்கு ஒவ்வோர் எடுத்துக்காட்டுத் தருக.**

அ. "எழுத்தெனப்படுப, அகரமுதல் னகர இறுவாய், முப்பஃதென்ப, சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே" என்ற நூற்பாவில் முப்பஃது என்று கூறியது, எழுத்து இனைத்து என்றவாறு.

ஆ. "அவற்றுள், அஇஉ, எஒ என்னும் அப்பால் ஐந்தும், ஓரளபிசைக்கும் குற்றெழுத் தென்ப" என்ற நூற்பாவில் குற்றெழுத்து என்று கூறியது, இன்ன பெயரின என்றவாறு.

இ. "எழுத்தெனப்படுப" என்ற நூற்பாவில் அகரமுதல் னகர இறுவாய் என்று கூறியது, எழுத்து இன்ன முறையின என்றவாறு.

ஈ. "அவற்றுள், அ இ உ" என்ற நூற்பாவில் ஓரளபிசைக்கும் என்று கூறியது, எழுத்து இன்ன அளவின என்றவாறு.

உ. "அவற்றுள், அஆ ஆயிரண்டு அங்காந்தியலும்" என்ற நூற்பாவில் அங்காந்தியலும் என்று கூறியது, எழுத்து இன்ன பிறப்பின என்றவாறு.

ஊ. "புள்ளியீற்றுமுன் உயிர்தனித்தியலாது, மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுத்தே" என்ற நூற்பாவில் புள்ளியீற்றுடன் உயிர் ஏறிமுடியும் என்று கூறியது, எழுத்து இன்ன புணர்ச்சிய என்றவாறு.

எ. "மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்", "எகர ஒகரத்து இயற்கையும் அற்றே" என்ற நூற்பாக்களில் மெய்களும் எகர ஒகர உயிர்களும் புள்ளி பெற்று நிற்கும் என்று கூறியது, எழுத்து இன்ன வடிவின என்றவாறு.

ஏ. எழுத்தின் தன்மை மனத்தான் உணரப்படுமாறு போலப் பிறர்க்கு உணர்த்தல் அரிது ஆகலான், தொல்காப்பியர் தம் நூலுள் எழுத்தின் தன்மையைக் கூறிற்றிலர்.

## 7. எழுத்து எட்டிறந்த பலவகையாக உணர்த்தப்பட்ட வற்றில் எவையேனும் ஐந்திற்கு எடுத்துக் காட்டுத் தருக.

அ. "அரையளவு குறுகல் மகரம் உடைத்தே, இசையிடன் அருகும் தெரியும் காலை" என்ற நூற்பாவில் மகரம் குறுகும் என்று கூறியது, குறைவு கூறியவாறு.

ஆ. "மஃகான் புள்ளிமுன் வவ்வும் தோன்றும்" என்ற நூற்பாவில் மகர ஒற்றை அடுத்து வகரம் நிற்கும் என்று கூறியது, மயக்கம் கூறியவாறு.

இ. "பன்னீருயிரும் மொழிமுதலாகும்" என்ற நூற்பாவில் பன்னிரண்டு உயிரும் மொழிக்குமுன் நிற்கும் என்று கூறியது, நிலை கூறியவாறு. (மொழிமுதல், மொழியிடை மொழியீறு என நிலை மூன்று வகைப்படும்; அவற்றுள் ஷ நூற்பா மொழிமுதல் நிலை.)

ஈ. "அல்வழி எல்லாம் உறழென மொழிப" என்ற நூற்பாவில் லகரம், லகரமாயும் றகரமாயும் உறழ்ந்துவரும் என்று கூறி மீண்டும், "தகரம் வரும்வழி ஆய்தம் நிலையலும்" என்ற நூற்பாவில் (முன்பு றகரமாய்த் திரிந்தது) ஆய்தமாய்த் திரியும் என்று கூறியது, திரிந்ததன் திரிபு கூறியவாறு. (கல் + தீது = கல்தீது, கற்றீது — ல் — ற் என்று ஆகியது திரிபு. கல் + தீது = கற்றீது, கஃறீது — றகரம் ஆய்தம் ஆகியது திரிந்ததன் திரிபு.)

உ. "வாழிய என்னும் சேயென்கிளவி, இறுதியகரம் கெடுதலும் உரித்தே" என்ற நூற்பாவில் யகரம் கெடுதலும் கெடாமையும் உரித்து என்று கூறியது, நிலையிற்றும் நிலையாதும் என்று கூறியவாறு.

## 8. எழுத்ததிகாரத்தில் கூறப்பட்ட இலக்கணங்கள் எல்லாம் கருவி செய்கை என்ற இரண்டில் அடங்கும் என்பர்: விளக்குக. (1961)

கருவி – புறப்புறக்கருவி, புறக்கருவி, அகப்புறக்கருவி, அகக்கருவி என நான்கு வகைப்படும்.

செய்கை-புறப்புறச்செய்கை, புறச்செய்கை, அகப்புறச்செய்கை, அகச் செய்கை என நான்கு வகைப்படும்.

| இயல்கள் | அடங்குமாறு |
|---|---|
| 1. நூன்மரபு ... ... ... | புறப்புறக்கருவி |
| 2. மொழிமரபு ... ... ... | புறக்கருவி |
| 3. பிறப்பியல் ... ... ... | புறப்புறக்கருவி |
| 4. புணரியல் ... ... ... | அகப்புறக்கருவி |

5. தொகைமரபு ... ... அகச்செய்கை
6. உருபியல் ... ... ... அகச்செய்கை
7. உயிர்மயங்கியல் ... ... அகச்செய்கை
8. புள்ளிமயங்கியல் ... ... அகச்செய்கை
9. குற்றியலுகரப் புணரியல் ... அகச்செய்கை

(மேற்கண்ட பாகுபாடு பெரும்பான்மை பற்றியது; சிறுபான்மை நூற்பாக்கள் அகக்கருவி, புறப்புறச்செய்கை, புறச்செய்கை, அகப்புறச்செய்கை பற்றியும் வரும்.)

9. நூன்மரபு என்றதன் பெயர்க்காரணத்தை ஆய்க.

## நூன்மரபு என்றதன் பெயர்க்காரணம்

1. எழுத்ததிகாரத்தால் சொல்லப்படும் எழுத்திலக்கணத்தினை ஓராற்ருல் தொகுத்து உணர்த்துதலின் நூன் மரபு என்னும் பெயர்த்து என்று இளம்பூரணர் காரணம் கூறினுர். அங்ஙனமாயின், எழுத்ததிகார மரபு என்று பெயர் கூறவேண்டுமே ஒழிய நூன்மரபு என்று கூறப் படாது எனச் சிவஞானமுனிவர் இளம்பூரணரின் கருத்தை மறுத்துள்ளார்.

2. தொல்காப்பியம் என்னும் நூற்கு மரபாம்துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்து உணர்த்தினமையின் நூன்மரபு என்னும் பெயர்த்தாயிற்று என்று நச்சினுர்க் கினியர் காரணம் கூறினுர். அங்ஙனமாயின், நூன்மரபில் கூறப்பட்ட இலக்கணம் தொல்காப்பியம் முழுவதற்கும் பொருந்தவேண்டுமன்ருே; அங்ஙனமன்றி நூன்மரபு செய்கை ஓத்திற்கும் செய்யுளியற்கும் மட்டுமே பொருந்தும் எனச் சிவஞானமுனிவர் நச்சினுர்க்கினியரின் கருத்தை மறுத்துள்ளார்.

3. நூலினது மரபுபற்றிய பெயர்கூறுதலின் நூன்மரபு என்று பெயர்பெற்றது என்று சிவஞானமுனிவர் காரணம்

கூறினர். நூன்மரபில் எழுத்தின் பெயர்களேயன்றி நூன் மரபு பற்றி வரும் பெயர் அனைத்தும் கூறப்படாமையின் குன்றக் கூறலாம் ஆகலானும், இவ்வியலுள் கூறப்படுவது தனிநின்ற எழுத்துக்களின் இலக்கணமே ஆகலானும் சிவஞானமுனிவரின் கருத்துப் பொருந்தாது என வேங்கட ராஜுலு ரெட்டியார் மறுத்துள்ளார்.

4. மொழியின் இயல்பு உணர்த்திய இயல் மொழிமரபு எனப்பட்டதுபோல எழுத்தின் இயல்பு உணர்த்திய இயல் நூன்மரபு எனப்பட்டது; நூல் என்றது ஈண்டு எழுத்தினை உணர்த்திற்று — என்று வேங்கடராஜுலு ரெட்டியார் காரணம் கூறினர். மேலும் அவரே, நூல் என்பதற்கு எழுத்து என்னும் பொருள் உண்டு என்பதற்கு மேற்கோள் அறியப்படாமையின் இது இன்னும் ஆராயவேண்டுவதாய் உள்ளது என எழுதி உள்ளார்.

எனவே நூன்மரபு என்றதன் பெயர்க்காரணம் தெளிவுருமல் இன்னும் ஆய்வு நிலையிலேயே உள்ளது.

### 10. நூன்மரபு என்பது போன்று இயல்கள் சிலவற்றுக்கும், புணரியல் என்பது போன்று சில இயல்கட்கும் பெயர்வைத்த காரணத்தை ஆய்க. (1961)

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் உள்ள ஒன்பது இயல்களில் நூன்மரபு, மொழிமரபு, தொகைமரபு என்ற மூன்றும் மரபு எனப்பட்டன. பிறப்பியல், புணரியல், உருபியல், உயிர்மயங்கியல், புள்ளிமயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என்ற ஆறும் இயல் எனப்பட்டன.

இயல், மரபு எனப்பட்டவை ஈண்டுப் பொதுவாக ஒத்துக்களைக் குறித்தனவேனும் சிறிது நுட்பமான வேறுபாடும் கொண்டுள்ளன. தொல்காப்பியர் முந்துநூல் பலவற்றின் கருத்துக்களையும் தமது கருத்தையும் தம்நூலுள் கூறுகின்றார். அங்ஙனம் கூறுங்கால் முந்துநூல்

கருத்துக்கள் பெரும்பான்மையும் சொல்லப்பட்ட ஓத்துக் களை மரபு என்றும், தம் கருத்துக்கள் பெரும்பான்மையும் சொல்லப்பட்ட ஓத்துக்களை இயல் என்றும் அழைத்தார்.

மரபு என்பது தொன்றுதொட்டு வருவது. எழுத்து முப்பஃது என்பதும், அவை குறில் நெடில் உயிர் மெய் எனப் பெயர் பெறும் என்பதும் தொன்றுதொட்டு வரும் இலக்கணம். இவைபோன்றவற்றை "என்ப" எனவும், "மொழிப" எனவும் பண்டை ஆசிரியர்மேல் வைத்து நூற்பா செய்தார் தொல்காப்பியர்.

இயல் என்பது இலக்கணம். இவை தாம் சொன் னவோ? முன்னோர் சொன்னவோ? எனின், தாம் சொன் னவேயாம்; முன்னோர் சொன்னவாயின் மரபு எனப்படு மாகலின். இனி, இரண்டும் ஆம் எனினும் இழுக்காது.

மரபு எனப்பட்டவற்றில் ஒருசில நூற்பாக்கள் தம் கருத்தாயும், இயல் எனப்பட்டவற்றில் ஒருசில நூற்பாக்கள் முன்னோர் கருத்தாயும் வந்துள்ளனவாகலின், மரபு இயல் என்பன காரணம் பற்றிப் பெரும்பான்மையும் நோக்கி வைக்கப்பட்ட பெயராம்.

11. "குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தம் என்ற, முப்பாற்புள்ளியும் எழுத்தோரன்ன" — இதன் உரைகளை ஆய்க.

## இளம்பூரணர் உரைக்கருத்து

குற்றியலிகரம் — குற்றியலிகரமும்; குற்றியலுகரம் — குற்றியலுகரமும்; ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும் — ஆய்தம் என்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளி எழுத்தும்; எழுத்தோரன்ன—மேற்சொல்லப்பட்ட முப்பது எழுத்தோடு ஒரு தன்மையவாம்.

(அஃதாவது முப்பாற்புள்ளி என்பது ஆய்தம் ஒன்றையே குறிக்கும்; குற்றியலிகரம் முதலிய மூன்றையும் குறிக்காது. குற்றியலிகரம் குற்றியலுகரம் புள்ளிபெறும் எனில் மெய்யெழுத்தெனப் பட்டுவிடும்; அவை மெய் யெழுத்தல்ல; உயிரெழுத்தேயாம். சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோல் ஆகாதவாறு போல உயிரது குறுக்கமும் உயிரேயாம்.)

நச்சினார்க்கினியர் உரைக்கருத்தும் இதுவே.

## ஷை உரைகளுக்கு மறுப்பு

அ. இளம்பூரணரும் நச்சரும் தம்முடைய உரையை நிலைநாட்டவேண்டிக் குற்றியலிகரம் குற்றியலுகரம் என்ற விடத்து உம்மை விகாரத்தான் தொக்கது என்று எழுதி உள்ளனர்.

ஆ. ஒருதிறப்பட்ட மூன்று எழுத்துக்களைக் கூறு மிடத்து ஒன்றுக்குமட்டும் பிரித்து விளக்கம் கூறுதல் சிறப் பின்று; அவ்விளக்கம் மூன்றுக்கும் உரித்தாகக் கொள் வதே அமைவாகும்.

இ. சங்கயாப்பு என்னும் நூலுடையாரும் இம்மூன் றெழுத்தும் புள்ளிபெறுவன என்று கூறியுள்ளார்.

ஈ. பேராசிரியரும் இவ்வெழுத்துக்களைப் புள்ளியிட் டெழுதுக என்று செய்யுளியலில் கூறியுள்ளார்.

உ. சிவஞானமுனிவரும் இம்மூன்றெழுத்தும் புள்ளி பெறுவன என்று கூறியுள்ளார்.

ஊ. தற்கால ஆய்வாளர் பலர்க்கும் இம்மூன்றெழுத் தும் புள்ளிபெறுவன என்பது உடன்பாடாகும். எனவே மேற்கண்ட காரணங்களினால் இளம்பூரணர் உரையும் நச்சர் உரையும் பொருந்தா என்பது தெளிவாகும்.

## உண்மை உரை

குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற — குற்றிய லிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் என்று சொல்லப்பட்ட; முப்பாற் புள்ளியும் — மூன்று வகைப்பட்ட புள்ளிபெறும் எழுத்துக்களும்; எழுத்தோரன்ன — மேற் சொல்லப்பட்ட முப்பது எழுத்துக்களோடு ஒரு தன்மைய வாம். (அஃதாவது குற்றியலிகரமும், குற்றியலுகரமும் ஆய்தமும் புள்ளிபெறும் எழுத்துக்களாம். புள்ளி பெற்ற தால் எகர ஒகரம் எப்படி மெய்யாகவில்லையோ அவை போலக் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் புள்ளிபெற்ற போதும் மெய்யாகவில்லை; உயிரேயாகும்.)

### 12. "சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோ லாகாதவாறு போல" — இவ்வுவமை யால் விளக்கப்பட்டுள்ளதனைத் தருக. (1955)

"குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற, முப் பாற்புள்ளியும் எழுத்தோரன்ன" என்ற நூற்பாவுக்கு உரை எழுதுங்கால் விளக்க உரையில் "சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோல் ஆகாதவாறுபோல" என்னும் உவமையை இளம்பூரணர் காட்டுகின்றார்.

குற்றியலிகரம் குற்றியலுகரம் என்பன அரை மாத்திரை அளவினவாய்ப் புள்ளி பெறுவனவாய் இருக் கின்றன. அரை மாத்திரை அளவாய்ப் புள்ளிபெறும் ஒற்றெழுத்துப்போல இவை இருத்தலின் ஒரு சிலர் இவற்றை மெய்யெழுத்துக்கள் என்றனர். அவர் கருத்தை மறுக்க நினைத்த இளம்பூரணர், "சந்தனக்கட்டை பலகாலும் இழைக்கப்பட்டுத் தேய்ந்து மெலிந்து போனாலும் சந்தனக் கட்டை எனப்படுமே ஒழியப் பிரப்பங்குச்சி என்று கூறப் படுவதில்லை அன்றோ! அதுபோல முற்றியலிகரம் முற்றிய லுகரம் இரண்டும் தமது மாத்திரை அளவில் குறைந்து

மெலிந்து ஒலித்தாலும் உயிரெழுத்துக்களே ஆகும். அதாவது உயிரது குறுக்கமும் உயிரேயாகும்.'' என்று விளக்குகின்றார்.

**13. தொல்காப்பியர் காரணம்பற்றியன்றிக் குறியிடார் ஆகலின் குறில் நெடில் உயிர் மெய் வலி மெலி இடை என்ற குறிகளை என்ன காரணம் பற்றிக் கையாண்டார் என விளக்குக.**

குறில்: நெடிலை நோக்கத் தாம் ஒரு மாத்திரை குறைந்து குறுகி நிற்றலின் குறில் எனப் பெயர் பெற்றன. நெடில்: குறிலை நோக்கத் தாம் ஒரு மாத்திரை கூடி நீண்டு நிற்றலின் நெடில் எனப் பெயர்பெற்றன. ஐஔ இரண்டும் தமக்கு இனமான குறிலைப் பெறாது இருக்கவும் ஏனை நெடிலை ஒப்ப இரண்டு மாத்திரை பெறுதலின் நெடில் எனப் பெயர் பெற்றன. உயிர்: தனித்து இயங்காத உடலை இயக்கித் தானும் தனித்து இயங்கும் ஆற்றல் உடைய உயிரைப்போல, மெய்யெழுத்துக்களை இயக்கித் தாம் தனித்தும் இயங்கலின் உயிர் எனப் பெயர் பெற்றன. மெய்: தாமே தனித்து இயங்கும் ஆற்றல் இன்றி உயிரின் உதவியால் இயங்கும் உடம்பு போலத் தாம் தனித்து இயங்காமல் உயிர் எழுத்துக்களின் உதவியால் இயங்குதலின் மெய் எனப் பெயர் பெற்றன. உயிர், மெய் என்பன உவமையாகு பெயர்கள். வலி: வல்லென் றிசைத்தலானும் வல்லென்ற தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்து எனப் பெயர் பெற்றன. மெலி: மெல்லென்றிசைத்தலானும் மெல்லென்ற மூக்குவளியாற் பிறத்தலானும் மெல்லெழுத்து எனப் பெயர் பெற்றன. இடை: வலிக்கும் மெலிக்கும் இடை நிகரவாகி ஒலித்தலானும் இடையெழுத்து எனப் பெயர்பெற்றன.

14. "மூவள பிசைத்தல் ஓரெழுத்தின்றே" — விளக்குக.

"குறில் ஒரு மாத்திரை பெறும்; நெடில் இரண்டு மாத்திரை பெறும்" என்றவுடன், "மூன்று மாத்திரை பெறும் எழுத்தும் உளவோ?" என ஐயுறும் மாணவர்க்கு ஐயம் அறுக்க வேண்டி, "மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே" என்று தொல்காப்பியனார் கூறினார்.

மற்றும், "வடமொழியில் ஒரு மாத்திரை எழுத்து ஹ்ரஸ்வம் என்றும், இரண்டு மாத்திரை எழுத்து தீர்க்கம் என்றும், மூன்று மாத்திரை எழுத்து ப்லுதம் என்றும் அழைக்கப்படுவதுபோல் தமிழிலும் மூன்று மாத்திரை எழுத்து உண்டோ?" என்று ஐயுற்றார்க்கு ஐயம் அறுக்க இந்நூற்பா கூறப்பட்டது எனினும் ஆம்.

இனித் தமிழிலும் அளபெடை என்பதொன்று மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையும் பெறுகின்றதன்றே! ஆசிரியர் தொல்காப்பியர் இங்ஙனம் கூறுதல் அமையுமோ எனின் அமையும். மூவளபிசைத்தல் ஓர் எழுத்தின்றே என்னும் இந்நூற்பாவில் ஓர் எழுத்து என்பது நோக்கற் பாலது. எனவே, மூன்று மாத்திரையை உணர்த்துவன ஒரு எழுத்தல்ல; இரண்டு எழுத்துகள் என்பது பெறப் படும். அவை நெடிலும் அதன் இனமான குறிலுமாக எழுதப்படும் என்றதைக் "குன்றிசை மொழிவயின் நின் றிசை நிறைக்கும் நெட்டெழுத்திம்பர் ஒத்த குற்றெழுத்தே", "ஐஔ என்னும் ஆயிரெழுத்திற்கு, இகர உகரம் இசை நிறைவாகும்" என்ற நூற்பாக்களால் அறியலாகும்.

15. அளத்தலின் வகைகளையும் அவற்றுள் எழுத்திற்கு மாத்திரை கோடல் இன்னதன்பாற் படும் என்பதனையும் விளக்குக. (1959)

அளவைகளின் வகை—7

1. நிறுத்தளத்தல் — பொன்னைக் கழஞ்சு தொடி என அளப்பது முதலியன.

2. பெய்தளத்தல் — பால் தயிர் போன்றவற்றை நாழி உரி என்பவற்றில் ஊற்றி மேல்வாய் மட்டமாக வைத்து அளப்பது முதலியன.

3. நீட்டியளத்தல் — பிரதிமங்களைச் சாண் விரல் தோரை என அளப்பது முதலியன.

4. நெறித்தளத்தல் — யாழின் நரம்புகளை விரலால் தட்டிச் சுருதியைச் செவியான் அளப்பது முதலியன.

5. தேங்கமுகந்தளத்தல் — நெல்லைக் கலம் குறுணி என அளவையின் மேல்வாயில் கூராகத் தேங்கி நிற்கு மாறு வைத்து அளப்பது முதலியன.

6. சார்த்தியளத்தல் — அம்மலை ஒக்கும் இக்களிறு என ஒன்றுடன் ஒன்றைச் சார்த்தி மனச் சார்பினனே அளப்பது முதலியன.

7. எண்ணியளத்தல் — பஞ்சவர்க்குப் பகை நூற்றுவர் எனப் பாண்டவர் ஐவர் எனவும் கௌரவர் நூற்றுவர் எனவும் எண்ணிக்கூறுவது முதலியன.

இவ்வெழுவகை அளவைகளுள் எழுத்துக்கு மாத்திரை கோடல் சார்த்தியளத்தலின் பாற்படும் அ என்னும் எழுத்துத் தோன்றி மறையும் காலக்கழிவும், இயற்கையாய் ஒருமுறை கண்ணிமைத்தலின் காலக்கழிவும் ஒக்கும் என ஒன்றுடன் ஒன்றைச் சார்த்தி வைத்து மனச் சார்பினன் அளந்து கூறுதலின் சார்த்தியளத்தலாகும்.

16. அளத்தலின் வகைகளை விளக்கி அவற்றுள் எழுத்துக்களுக்குக் கூறப்படும் மாத்திரை இன்ன அளவையின் பாற்படும் எனவும் எழுதுக. (1960)

விடை 15-ல் காண்க.

17. "அவ்வியல் நிலேயும் ஏனேமூன்றே" — உரை தருக.

"அவ்வியல் நிலேயும் ஏனே மூன்றே" என்பது நூற்பா. (பொருள்) : ஏனே மூன்று—ஒழிந்த சார்பின் தோற்றமாகிய குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற மூன்றெழுத்துக்களும்; அவ்வியல் நிலேயும் — மேற்கூறிய அரை மாத்திரையின் கண்ணே நிற்கும்.

அவ்வியல் நிலேயும் என்ற மாட்டேறு, "மெய்யின் அளபே அரை என மொழிப" என்னும் நூற்பாவில் அரை என்பதைத் தழுவி நின்றது.

18. "உட்பெறு புள்ளி உருவா கும்மே" — இதன் உரைகளே ஆய்க.

"உட்பெறு புள்ளி உருவா கும்மே"- என்பது நூற்பா.

இளம்பூரணர் உரை: உட்பெறுபுள்ளி — பகரம் புறத்தே பெறும் புள்ளியோடு உள்ளாற்பெறும் மற்ருேர் புள்ளி; உருவாகும்மே — மகரத்துக்கு வடிவமாகும்.

ப் = ம்

நச்சிஞர்க்கினியரும் இளம்பூரணரைத் தழுவி உரை கூறினர்.

ஷ உரைக்கு மறுப்பு: இந்நூற்பாவில் இன்ன எழுத்தின் உள்ளே பெறும்புள்ளி இன்ன எழுத்துக்கு வடிவம் என்று விபரம் கூறப்படவில்லே. இளம்பூரணரும் நச்சரும் பகர மகரத்திடை வடிவு வேறுபாடு கூறுகின்றது என்று வருவித்து உரைக்கின்றனர். இதற்கு முந்திய நூற்பாக்களில் பகர மகரத்தைப் பற்றிய பேச்சு இல்லே. எனவே இவர்கள் இங்ஙனம் வருவித்தல் பொருந்தாது.

உண்மை உரை: உட்பெறுபுள்ளி — மகரம் புறத்தே பெறும் புள்ளியோடு உள்ளாற்பெறும் மற்ருேர் புள்ளி; உருவாகும்மே — மகரக் குறுக்கத்துக்கு வடிவமாகும்.

ம் — இயல்பான மகரத்தின் வடிவம்.

ம் — மகரக் குறுக்கத்தின் வடிவம்.

விளக்கம்: ஓரெழுத்து தனக்குரிய மாத்திரையில் குறைகிறது என்பதைக் காட்ட அவ்வெழுத்தின்மேல் ஒரு புள்ளியிடுவது வழக்கம். எகர ஒகரங்கள் புள்ளிபெற்று ஏகார ஓகாரங்களினின்றும் குறைவதைக் காட்டுகின்றன. (பழங் கால வடிவில் எ – இருமாத்திரை; எ் – ஒருமாத்திரை; ஒ – இருமாத்திரை; ஒ் – ஒரு மாத்திரை.) குற்றியலிகரம் குற்றியலுகரம் என்பனவும் புள்ளிபெற்று முற்றியலிகர முற்றியலுகரங்களினின்றும் குறைவதைக் காட்டுகின்றன. (நகு — கு – ஒரு மாத்திரை; நாகு — கு் – அரை மாத்திரை.) மெய்யெழுத்துக்களும் புள்ளி பெற்று உயிர்மெய்யெழுத்துக்கு உரிய மாத்திரையில் குறைகின்றன என்பதைக் காட்டுகின்றன. (க – ஒரு மாத்திரை; க் – அரை மாத்திரை.) மகர உயிர்மெய் மாத்திரை குறைந்து மகர மெய்யாவதைக் காட்ட ஒரு புள்ளி மேலே இடப்பட்டது. (ம – ஒரு மாத்திரை; ம் – அரை மாத்திரை.) இனி அம்மகரமெய் மேலும் மாத்திரை குறைந்து மகரக் குறுக்கம் ஆவதைக் காட்ட மற்றுமோர் புள்ளி உள்ளே இடவேண்டியதாயிற்று. (ம் – அரை மாத்திரை; ம் – கால் மாத்திரை.) இவ்வாறு மகரக் குறுக்கத்தின் வடிவு கூறுவதே இந்நூற்பாவின் நோக்கமாகும்.

இந்நூற்பாவில் இன்ன எழுத்துக்கு என்று விபரம் கூறாமையாலும், இதன் முந்திய நூற்பாவாகிய "அரையளவு குறுகல் மகரம் உடைத்தே" என்பதில் அதிகரித்து நின்ற மகரக் குறுக்கத்தை வருவித்தல் முறையாகலானும், மகரக்குறுக்கம் மற்றுமோர் புள்ளிபெறும் என்பதை வீரசோழியம் சந்திப்படலம் 19-ம் சூத்திர உரை கூறுவதனுலும், பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார், வே. வேங்கட-ராஜுலு ரெட்டியார் போன்ற ஆராய்ச்சியாளர் கருத்தும் இதுவேயாகலானும் இதுவே உண்மை உரை எனத்தகும்.

19. உருவுதிரிந்து உயிர்த்தலாவது யாது? உதாரணத்துடன் விளக்குக.

மெய்யெழுத்துக்களோடு உயிரெழுத்துக்கள் கூடும் போது உயிர்மெய்யெழுத்துக்கள் ஆகின்றன. அங்ஙனம் ஆகும்போது மெய்யெழுத்துக்கள் அகர உயிருடன் கூடிப் புள்ளி நீங்கி உயிர்மெய் வடிவம் பெறுகின்றன; ஏனை உயிரெழுத்துக்களுடன் கூடி உருவுதிரிந்து வருகின்றன.

அவ்வாறு உருவுதிரிந்து உயிர்த்தலாவது மேலும்கீழும் விலங்கு பெறுவன விலங்கு பெற்றும், கோடு பெறுவன கோடு பெற்றும், புள்ளி பெறுவன புள்ளிபெற்றும், புள்ளியும் கோடும் உடன்பெறுவன உடன்பெற்றும் நடத்தலாம்.

| பழங்கால வடிவம் | | தற்கால வடிவம் | | விபரம் |
|---|---|---|---|---|
| கி , கீ | — | கி , கீ | — | மேல் விலங்கு பெற்றன |
| கு , கூ | — | கு , கூ | — | கீழ் விலங்கு பெற்றன |
| கெ , செ | — | கே , சே | } | கோடுபெற்றன |
| கெ | — | கை | | |
| எ ' ஒ | — | எ , ஒ | } | புள்ளிபெற்றன |
| க. | — | கா | | |
| கெ் , செ் | — | கெ , செ | } | புள்ளியும் கோடும் |
| கெ்., செ். | — | கொ, சொ | | உடன் பெற்றன |

20. "மெய்யின் வழியது உயிர் தோன்று நிலை." என்றதால் பெறப்படுவது என்ன? (1958)

''மெய்யின் வழியது உயிர் தோன்று நிலையே'' என்ற நூற்பாவில் தோன்று நிலை என்றதால் உயிர்மெய்களைப் பிரிக்குமிடத்தும் கூட்டுமிடத்தும் மெய்யை முன்னும் உயிரைப் பின்னுமாகவே வைத்துக்கொள்ளல் வேண்டும். மெய் முன்னும் உயிர் பின்னும நிற்கும் என்றதால் இவ் வுயிர்மெய்க் கூட்டமானது பாலும் நீரும் உடன் கலந்ததை ஒக்கும்; இவ்வாறன்றி விரல் நுனிகள் தலைப்பெய்தாற் போல வேறு நின்று கலந்தன வல்ல.

21. இளம்பூரணர் உவமைகளின் வாயிலாகப் பொருள் விளக்கம் செய்வர் என்பதனை நான்கு எடுத்துக்காட்டால் இடஞ்சுட்டி விளக்குக. (1960)

## உவமைகள்

இளம்பூரணர் காட்டிய உவமைகளில் நான்கு:— (1) கற்றுவல்ல கணவற்குக் கற்புடையாள் போல. (2) சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோல் ஆகாது அதுபோல. (3) நாலுழக்குக் கொண்டது நாழி என்றாற் போல. (4) விரல் நுனிகள் தலைப்பெய்தாற்போல.

## விளக்கம்

(அ) "எந்நூல் உரைப்பினும் பாயிரம் உரைத்தபின் உரைக்கவேண்டும். அப்பாயிரந்தான் நூலுக்கு இன்றியமையாச் சிறப்பும், அலங்காரமாதற் சிறப்பும் என இரு சிறப்புக்களைத் தரும்." என்பதைக் கூறவந்த இளம்பூரணர் இன்றியமையாச் சிறப்பை விளக்குவதற்காகக "கற்றுவல்ல கணவற்குக் கற்புடையாள் போல" என்ற உவமையை எடுத்துரைக்கின்றார். எத்துணைக்கற்றவனாயினும் அவன் நடத்தும் இல்வாழ்க்கைக்குக் கற்புடையாள் ஒருத்தி இன்றியமையாது தேவையன்றோ? அதுபோல நூலானது ஆயிரமுகத்தான் அகன்றதாயினும் அதற்குப் பாயிரம் இன்றியமையாதது ஆகும்.

(ஆ) குற்றியலிகரம் குற்றியலுகரம் ஒவ்வொன்றும் அரை மாத்திரை பெறுகின்றன; (மற்றும் இவை புள்ளி பெறுகின்றன.) மெய்யெழுத்துக்களும் அரை மாத்திரை பெறுகின்றன; (புள்ளி பெறுகின்றன.) இவ்வொப்புமை நோக்கிக் குற்றியலிகரக் குற்றியலுகரங்களைச் சிலர் மெய் (புள்ளி) என்றனர். ஆனால், "இவை மெய்யல்ல; உயிரேயாம்" என்பதை விளக்கவந்த இளம்பூரணர், 'சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோல் ஆகாது அதுபோல" என்ற

உவமையை எடுத்தாளுகிருர். சந்தனக்கட்டை இழைக்கப்பட்டுத் தேய்ந்து மெலிந்துபோனுலும் சந்தன்க் கட்டையே ஆகும்; அது பிரப்பங்குச்சியாக மாறிவிடாது. அதுபோல முற்றியலிகர முற்றியலுகரங்கள் என்னும் உயிரெழுத்துக்கள் மாத்திரை குறைந்து குற்றியலிகரக் குற்றியலுகரங்கள் ஆயினும் உயிரெழுத்துக்களே யாகும்; மெய்யெழுத்தாகமாட்டா.

இ. எழுத்துக்களின் காலஅளவு மாத்திரை எனப் படும். எழுத்துக்கள் ஒன்று இரண்டு கால் அரை என மாத்திரை பெறுகின்றன. இவ்வாறு கால், அரை, ஒன்று, இரண்டு என மாத்திரை அளவு கூறப்படுமேயன்றி வேறு பெயரான் கூறப்படுவதில்லே. (அதாவது இர்ண்டு மாத் திரை கொண்டது இன்னது; மூன்றுமாத்திரை கொண்டது இன்னது என்று கூறப்படுவதில்லே.) இக்கருத்தை விளக்க வந்த இளம்பூரணர், "நாலுழக்குக் கொண்டது நாழி என்குற் போல" என்ற உவமையைக்கூறி அளவைக்கு அளவை பெருமை அறிக என்று கூறினுர். நான்கு உழக்குச் சேர்ந் தது ஒரு நாழி; இரண்டு நாழி—ஒருபடி; நாலுபடி—ஒரு குறுணி என்று அளவைக்கு அளவைகூறி வாய்பாடு பேசப் படுகின்றதன்ருே? அதுபோல ஒருமாத்திரைக்குப் பெயர் இன்னது; அது இரண்டுகொண்டது இன்னது என்று வாய்பாடு கூறப்படுவதில்லே.

ஈ. "மெய்யும் உயிரும் கூடி உயிர்மெய்யாகின்றன. இவ்வுயிர்மெய்யெழுத்தில் உயிரும் மெய்யும் உடன்கலந்து நிற்கும்; அவை பிரிந்து நில்லா" என்பதை விளக்கவந்த இளம்பூரணர், "விரல்நுனிகள் தலேப்பெய்தாற் போல" என்ற உவமையைக் காட்டுகிருர். அதாவது உயிர்மெய்க்கூட்ட மானது பாலும்நீரும்போல உடன்கலந்ததன்றி இரண்டு விரல்நுனிகள் ஒன்றுகூடி வேறுவேறு நின்றனபோல் கலந்தனவல்ல என்பதாம்.

**22. எழுத்துக்கள் உருவமா? அருவமா? காரணம் தருக.**

எழுத்துக்களுக்கு வரிவடிவம் ஒலிவடிவம் என இரு வடிவங்கள் உண்டு. வரிவடிவம் கண்ணால் காணப்படு தலின் அது உருவம் என்பது யாவர்க்கும் உடன்பாடே யாகும். ஆனால் ஒலிவடிவத்தைச் சிலர் உருவம் என்றும், சிலர் அருவம் என்றும் கூறினர். அருவம் என்பார், "ஒலி வடிவம் காற்றுமயமாய் நிற்றலானும், கண்ணுக்குப் புலனு காமையானும் அது அருவமாகும்." என்பர்.

ஆனால், இளம்பூரணர், "மெய்யெழுத்துக்கட்கு வன்மை மென்மை கூறப்படுதலின் எழுத்து அருவன்றி உரு வாதல் பெறப்பட்டது; உயிரெழுத்துக்கட்கும் குறுமை நெடுமை கூறப்படுதலின் உருவாதல் பெறப்பட்டது" என்றார். நச்சினார்க்கினியரும், "வன்மை மென்மை இடைமை என்ற பெயரான் எழுத்தென்னும் ஓசை உரு வாயின" என்றார்.

**23. மொழியிடைக்கண் மெய்யெழுத்துக்கள் மயங்கும் மயக்கம் எத்தனை வகைப்படும்? அவை எவ்வெச் சூத்திரங்களான் பெறப்படுகின்றன?**

மொழியிடைக்கண் மெய்யெழுத்துக்கள் மயங்கும் மயக்கம் நான்கு வகைப்படும். 1. மெய்ம்மயக்கம், 2. உடனிலை மயக்கம், 3. ஈரொற்றுடனிலை, 4. ஒற்றளபெடை.

**எடுத்துக்காட்டு**

1. கட்க — (ட்க) — மெய்ம்மயக்கம் (ஒரு மெய்ம்முன் வேறு மெய்)
2. காக்கை — (க்கை) — உடனிலை மயக்கம் (தன்மெய்முன் தன்மெய்)
   [ இவைகளில் ஒற்றும் உயிர்மெய்யும் மயங்கின]
3. ஈர்க்கு — (ர்க்) — ஈரொற்றுடனிலை (ஒரு மெய்ம்முன் வேறுமெய்)

4. வணங்கி — (ங்ங்) — ஒற்றளபெடை (தன் மெய்முன் தன்மெய்) [இவைகளில் ஒற்றும் ஒற்றும் மயங்கின]

அம்மூவாறும் வழங்கியல் மருங்கின் மெய்ம்மயங்கு உடனிலை தெரியுங்காலை என்ற நூற்பாவில் மெய்ம்மயக்கமும், உடனிலை மயக்கமும் கூறப்பட்டன. "யரழ என்னும் மூன்று முன் ஒற்றக் கசதப ஙஞநம ஈரொற்ருகும்" என்ற நூற்பாவில் ஈரொற்றுடனிலை கூறப்பட்டது. "அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்" என்ற நூற்பாவில் ஒற்றளபெடை கூறப்பட்டது. (ஈரொற்றுடனிலையை உடனிலை மயக்கத்துள் அடக்கியும், ஒற்றளபெடையை ஓரெழுத்தாகக் கொண்டு மயக்கமின்று என்றும் கொள்ளுவதும் உண்டு.)

24. "எழுத்ததிகாரத்துப் பெயர்வினையல்லன வற்றுக்குக் கருவி செய்யார் தொல்காப்பியர்" என்னும் இளம்பூரணர் கருத்துச் சரியாமோ? ஆய்க.

நூன்மரபின் ஈற்றில், "அஇஉ அம்மூன்றும் சுட்டு", "ஆஏஓ அம்மூன்றும் வினு" என்று தொல்காப்பியர் கூறினுர். சுட்டு வினு என்றும் இக்குறிகளைக் குறில் நெடில் கூறியவழிக் கூறவேண்டுமெனில், இச்சுட்டு வினுக்கள் சொல் நிலைமையில் பெறும் குறியாகலின் ஆண்டு வையாது அடுத்துவரும் மொழிமரபினைச் சாரவைத்தார். இக்குறி சொல்நிலைமைக்கேல் இவற்றை மொழிமரபில் வைக்காமல் நூன்மரபில் எழுத்தின்மேல் வைத்துக் கூறியது ஏனெனில் இவை இடைச்சொல்லாகலின் என்க. இவ்வதிகாரத்து இடை உரிக்குத் தொல்காப்பியர் கருவி செய்யார் ஆகலின், இச்சுட்டு வினுக்களைச் சொல்லாகக் கொள்ளாமல் எழுத் தாகக் கொண்டார். — இக்கருத்தில் இளம்பூரணர் எழுதினுர்.

உண்மையை நோக்கின், தொல்காப்பியர் எழுத்ததி காரத்தில் இடைச் சொல்லுக்குக் கருவி செய்திருக்கிறுர் என்பது புலனுகும். "சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்

ஒற்றிய ஒற்றிடை மிகுதல்வேண்டும்'', "மாறுகொள் எச்சமும் வினவும் எண்ணும் கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும்''- எனவரும் நூற்பாக்களினால் சுட்டுவினக்களுக்கு இலக்கணம் செய்யப்பட்டிருப்பது தெளிவாகின்றது. மற்றும், "மாறுகொள் எச்சம்" என்ற நூற்பாவின்கீழ் இது அவ்வீற்று இடைச்சொல்லுக்கு முடிவு கூறுதல் நுதலிற்று என்று இளம்பூரணரே எழுதி உள்ளார். ஆகவே, "எழுத்ததிகாரத்துப் பெயர் வினையல்லனவற்றுக்குக் கருவி செய்யார் தொல்காப்பியர்'' என்னும் கருத்துப் பொருந்து வதாக இல்லை.

## 25. நூன்மரபு மொழிமரபு இவ்விரண்டியலுக்குமுள்ள வேறுபாட்டை அவற்றில் கூறப்படும் விதிகளைக் கொண்டு விளக்குக. (1953)

நூன்மரபு மொழிமரபு ஆகிய இரண்டியல்களிலும் எழுத்தின் இலக்கணமே கூறப்படுகின்றதேனும், நூன் மரபில் தனிநின்ற எழுத்துக்கட்கும், மொழிமரபில் மொழியிடை நின்ற எழுத்துக்கட்கும் இலக்கணம் கூறப்படுகின்றன. இதுவே முக்கியமான வேறுபாடாகும்.

"எழுத்து முப்பஃது; அஇஉஎஒ குறில்; ஆஈஊஏ ஐஓஔ நெடில்; அம்முதல் ஔகார இறுதி உயிர்; கம் முதல் னகார இறுதி மெய்; மெய் அரை மாத்திரை; மெய் புள்ளிபெறும்; எகர ஒகரமும் அற்றே; கசடதபற வல்லினம்'' என்பன போன்றவை நூன்மரபில் கூறப் பட்டுள்ளன. இவ்வகை எழுத்துக்களை மொழிக்கண் வைத்து இவ்விலக்கணம் நோக்கவேண்டாமையின் இவை தனிநின்ற எழுத்துக்களின் இலக்கணமாயின.

"மியா என்னும் உரையசைக்கிளவியில் உள்ள இகர மும், யகரம்வரக் குற்றுகரம் திரிந்த இகரமும் குற்றியலிகர மாம். நெட்டெழுத்தின் பின்னரும் தொடர்மொழியீற்றும் வல்லொற்றில் ஏறிய உகரம் குற்றுகரமாம். குற்றெழுத்தின் பின்னரும் உயிருடன் கூடிய வல்லொற்றுக்கு முன்னுமாய்

நடுவில் வருவது ஆய்தமாம். குன்றிசைமொழிவயின் நெட்டெழுத்திம்பர் ஒத்தகுற்றெழுத்து நின்று அளபெடையாய் ஓசை நிறைக்கும்.'' என்பன போன்றவை மொழிமரபில் கூறப்பட்டுள்ளன. இங்ஙனம் குற்றியலிகரம் குற்றியலுகரம் முதலியவற்றை மொழிக்கண் வைத்தன்றி காணமுடியாமையின் இவை மொழியிடை நின்ற எழுத்துக்களின் இலக்கணமாயின.

26. நூன்மரபு மொழிமரபு இரண்டனுக்கும் உள்ள இயல் அடைவினைத் தருக. (1957)

விடை 25-ல் காண்க.

27. மொழிமரபு எவ்வெவற்றின் இலக்கணங்களை எடுத்துரைக்கின்றது? (1955)

## மொழிமரபு கூறும் இலக்கணம்

(1) குற்றியலிகரம் மியா என்னும் தனிமொழியிலும், யகரம் வரக் குறைந்த இகரமாய்த் தொடர்மொழியிலும் வரும். (2) நெட்டெழுத்திம்பரும் தொடர்மொழியீற்றிலும் வல்லெழுத்தை ஊர்ந்து குற்றியலுகரம் தனிமொழியில் வரும். (3) குற்றெழுத்தின் பின்னரும் வல்லொற்றின் முன்னருமாய் ஆய்தம் இடைப்பட்டுத் தனிமொழியில்வரும். (4) நெட்டெழுத்திம்பர் ஒத்தகுற்றெழுத்து நின்று அளபெடையாக வரும்; ஐகார ஔகாரங்களுக்கு இகர உகரம் இசைநிறைவாகும். (5) ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி, இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழி என மொழி மூன்று வகைப்படும். (6) மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும். (7) யரழ என்னும் மெய்களுடன் கசதப ஙஞநம என்பன ஈரொற்றாக வரும். (8) அகர இகரம் ஐகாரமாகவும், அகர உகரம் ஔகாரமாகவும், அகர யகரம் ஐகாரமாகவும் வரும். இகரத்துக்கு யகரம் இறுதியில் போலியாக வரும். (9) பன்னிரு உயிரும் மொழிமுதலாகும். உயிர் மெய்களுள் கசதப ஞநம யவ என்னும் ஒன்பதும்

மொழி முதலாகும். இவற்றுள் கதநபம என்பன 12 உயிருடனும் சகரம் 9 உயிருடனும் வகரம் 8 உயிருடனும் ஞகரம் 3 உயிருடனும் யகரம் ஒரு உயிருடனும் மொழிமுதலாகும். (10) நுந்தை என்னும் முறைப்பெயரில் குற்றியலுகரம் மொழிமுதலாகும். (11) பன்னிரு உயிரும் ஞணநமன யரலவழள என்னும் 11 மெய்யும் மொழியீருகும். (12) மகரத்தொடர்மொழி மயங்குதல் வரைந்த னகரத்தொடர் மொழி ஒன்பஃது என்ப; இவை அஃறிணைமேன.

பொதுவாக நோக்கின் மொழி மரபில் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற சார்பின் தோற்றத்தின் இலக்கணமும், அளபெடை மொழியாக்கம் மொழியின்வகை எழுத்தின்இயக்கம் ஈரொற்றுடனிலை போலி மொழிமுதல் மொழியீறு என்பவற்றின் இலக்கணமும் கூறப்பட்டுள்ளன.

28. சார்ந்துவரல் மரபின் மூன்றெழுத்தும் தனிமொழி தொடர்மொழிகளில் நிற்கும் முறைமை கூறிய நூற்பாக்கள் யாவை?

(குற்றியலிகரம் தனிமொழியில்)

1. குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே.

(அது தொடர்மொழியில்)

2. புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.
3. யகரம் வரும்வழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்ருது.

(குற்றியலுகரம் தனிமொழியில்)

4. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே.

(அது தொடர்மொழியில்)

5. இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான.

6. வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்
தொல்லை யியற்கை நிலையலும் உரித்தே.

(ஆய்தம் தனிமொழியில்)

7. குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

(அது தொடர்மொழியில்)

8. ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்.

29. சார்பெழுத்துக்கள் மூன்றும் ஒரு மொழியிலும் தொடர்மொழியிலும் இடம்பெறுதலை எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக. (1959)

குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பன சார்பெழுத்துக்கள். இவை ஒவ்வொன்றும் தனி மொழியிலும் தொடர்மொழியிலும் வரும்.

மியா என்னும் உரையசைக்கிளவியில் உள்ள இகரம் தனிமொழியில் வந்த குற்றியலிகரம். (மியா என்னும் சொல் இடம்; மகரம் பற்றுக்கோடு.) நாகியாது என்பதில் உள்ள இகரம் தொடர்மொழியில் வந்த குற்றியலிகரம். நாகு என்பதன் குற்றுகரம் கெட்டு இகரம் தோன்றி அவ்விகரமும் குறுகியது. (குற்றுகரச் சொல்லும் யகரம் வருவழியும் இடம்; உகரம் சார்ந்த வல்லெழுத்துப் பற்றுக்கோடு.)

நாகு, வரகு என்பவற்றில் வந்த உகரம் தனிமொழியில் வந்த குற்றுகரம். (நெட்டெழுத்திம்பரும் தொடர்மொழியீறும் இடம்; ஈற்று வல்லொற்றுப் பற்றுக்கோடு.) செக்குக்கணை என்பதில் உள்ள உகரம் தொடர்மொழியில் வந்த குற்றுகரம். (வல்லொற்றுத் தொடர் மொழியும் வல்லெழுத்து வருவழியும் இடம். வல்லொற்றுத் தொடர் மொழியின் ஈற்றுவல்லெழுத்துப் பற்றுக்கோடு.)

எஃகு என்பதில் உள்ள ஆய்தம் தனிமொழியில் வந்த ஆய்தம். (குற்றெழுத்து முன்னரும் வல்லெழுத்து மிசையும் இடம். ஆய்தம் உயிரன்மையின் பற்றுக்கோடில்லை.)

கஃறீது என்பதில் உள்ள ஆய்தம் தொடர்மொழியில் வந்த ஆய்தம். (இடம் முன்கூறியதே; பற்றுக்கோடு இல்லை.)

30. தொல்காப்பியர் மொழிநிலையை எவ்வாறு பிரித்துள்ளார்? அவ்வாறு பிரித்தது பொருந்துமா? ஆய்க.

தொல்காப்பியர் மொழிநிலையை ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி, இரண்டிறந்திசைக்கும் தொடர் மொழி என மூன்றாகப் பிரித்துள்ளார். (ஆ, கோ — ஓரெழுத்தொருமொழி; கல், மண்—ஈரெழுத்தொருமொழி; வரகு, புலவர் — தொடர் மொழி.)

இவ்வாறு பிரித்ததுகுறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. அவைகள் வருமாறு :—

அ. "ஒருமை, பன்மை என்பன தமிழ்வழக்கு; ஒருமை, இருமை, பன்மை என்பன வடமொழி வழக்கு. தொல்காப்பியர் மொழிகளை மூன்றாகப் பாகுபாடு செய்தது வடமொழி வழக்குப்பற்றியதாகும்" என்பது சங்கரநமச்சிவாயர் கருத்து. வடமொழியில் உள்ள பாகுபாடு சொற்களுக்கும் பொருள் களுக்குமே அன்றிச் சொல்லிடை நின்ற எழுத்துக்களுக்கு அன்று. எனவே, தொல்காப்பியர் வடமொழியைப் பின் பற்றினார் என்பது பொருந்தாது என, வே. வேங்கடராஜுலு ரெட்டியார் கூறுகிறார்.

ஆ. "ஓரெத்தொருமொழி, தொடர்மொழி என்னாது ஈரெழுத்தொருமொழியையும் தொல்காப்பியர் கூறியது சில பல என்னும் தமிழ்வழக்கு நோக்கி"–என்பது நச்சினார்க்கினியர் கருத்து. (அஃதாவது, பன்மை, சில எனவும் பல எனவும் பகுக்கப்பட்டு நிற்றல்போல ஒன்றுக்கு மேற்பட்ட எழுத் தால் ஆன சொற்கள் ஈரெழுத்தொருமொழி என்றும், தொடர்மொழி என்றும் பகுக்கப்பட்டன.)

இ. "இரண்டிறந் திசைக்கும் தொடர்மொழி என்றத னன், இரண்டும் இரண்டுக்கு மேற்பட்டதும் தொடர்மொழி யாகும்" என்பது சிவஞானமுனிவர் கருத்து. அங்ஙனமாயின்

சில பல என்பன தொடர்மொழியாகல் வேண்டும். ஆனுல் தொல்காப்பியர் சிலபல என்பவற்றைத் தொடரல் மொழி என்று குறிக்கின்ருர், எனவே, இக்கருத்தும் பொருந்தாது.

தொல்காப்பியர் இவ்வாறு பாகுபாடு செய்ததன் உள் நோக்கம் இன்னும் தெளிவுருமல் ஆய்வு நிலேயிலேயே இருக்கிறது.

### 31. "யரழ என்னும் மூன்றும்முன் ஒற்றக் கசதப ஙஞநம ஈரொற்ருகும்" — இதற்கு உரையாசிரியர் தரும் விளக்கம் என்ன? (1958)

யரழ என்னும் நூற்பா ஈரொற்றுடனிலேயை உணர்த்துகிறது. யரழ என்பவற்றுள் ஒன்று ஒற்ருய் நிற்க அவற்றுக்குமுன் கசதப ஙஞநம என்னும் எட்டில் ஒன்று ஒற்ருய் வந்து இணேந்து நிற்கும். (உ—ம்) வேய்க்குறை.

விளக்கம்: இவ்விதி யரழ என்பவற்றுள் ஒன்றை ஈற்றெழுத்தாக வைத்து நோக்குதலின் மொழியிறு உணர்த்தும் இடத்து உணர்ந்துகொள்ளப்படும் எனில், இது ஈர்க்கு என ஒருமொழிக்கண்ணும் வருதலின் ஆண்டுக் கூருது ஈண்டுக் கூறினுர்.

அங்ஙனமாயின் இவ்விதியை நூன்மரபில் மெய்ம்மயக்கம் கூறியவழிக் கூறுக எனின், ஆண்டு வேற்றுமை நயம் கருதியதாகலின் ஆண்டுக் கூருமல் ஒற்றுமை நயம் பற்றியதாகலின் ஈண்டுக் கூறினுர். (உயிர்மெய் எழுத்தை உயிர்வேறு மெய்வேருகப் பிரித்து நோக்கும் இலக்கணம் வேற்றுமைநயம். ஒரு மெய்யையோ உயிர்மெய்யையோ அங்ஙனமே முழுதாக வைத்து நோக்கும் இலக்கணம் ஒற்றுமைநயம்.)

### 32. ஒற்றுமைநயம், வேற்றுமைநயம் என்பவற்றை விளக்குக.

அ. ஒரெழுத்தை இரண்டாகப்பகுக்காமல் ஒன்ருகவே வைத்து இலக்கணம் கூறுவது ஒற்றுமைநயம் எனப்படும்.

(உ-ம்) 1. ஈர்க்கு என்பதில் க் என்னும் மெய் ரகர மெய்யுடன் இணைந்து ஈரொற்றுடனிலையாக வரும் என் புழிக் ககரத்தை ஓரெழுத்தாக வைத்துப்பார்த்தது ஒற்றுமை நயம். 2. சாவ என்னும் செயவென்னெச்சத்து இறுதி வகரம் கெடுதலும் உரித்தே என்பதில் வகரம் என்பது வகர மெய்யைக் குறிக்காமல் வகர உயிர்மெய்யைக் குறித்ததும் ஒற்றுமைநயம். 3. "காக்கை என்பதில் ககரம் அரை மாத்திரை" என்புழிக் ககரம் உயிர்மெய்க் ககரத்தைக் குறிக்காமல் நடுநின்ற ககர ஒற்றாகிய ஓரெழுத்து முழுதும் குறித்ததும் ஒற்றுமை நயம்.

2. ஓர் உயிர்மெய்யெழுத்தை இரண்டாகப் பகுத்து அதில் மெய்யையோ அன்றி உயிரையோ தனித்தனியாக எண்ணி இலக்கணம் காண்பது வேற்றுமை நயம் எனப் படும்.

(உ-ம்) வேர்கடிது என்பதில் ரகரத்தின்முன் ககரம் வந்தது என்புழிக் ககரம் என்பது ககர உயிர்மெய்யில் உள்ள மெய்யைமட்டும் பிரித்துக் காட்டியது வேற்றுமை நயம். க என்னும் உயிர்மெய் க்+அ எனப் பிரிக்கப்பட்டு மெய் மட்டும் தனித்து இலக்கணம் பெறுகிறது.

## 33. போலி எழுத்துக்கள் பற்றிக் கூறப்படும் இலக்கணத்தை எடுத்துக்காட்டுடன் விளக்குக. (1960)

### போலி எழுத்துக்கள் பற்றிய இலக்கணம்

1. அகரமும் இகரமும் கூடி ஐகாரம் போல் ஆகும்.
   (உ-ம்) அஇயர் = ஐயர்
2. அகரமும் உகரமும் கூடி ஔகாரம் போல் ஆகும்.
   (உ-ம்) அஉவை = ஔவை
3. அகரத்துடன் யகரமெய் கூடி ஐகாரம் போல் ஆகும்.
   (உ-ம்) அய்வனம் = ஐவனம்

[4. அகரத்துடன் வகரமெய் கூடி ஔகாரம் போல் ஆகும்.
(உ-ம்) அவ்வை = ஔவை]

5. மொழியீற்றில் இகரம் யகரம்போல் ஒலிக்கும்.
(உ-ம்) நாஇ = நாய்.

இவற்றுள் முதல் இரண்டு போலிகளையும் கடைசி போலியையும் கொள்ளற்க என்று இளம்பூரணரும், நச்சினர்க்கினியரும் எழுதியுள்ளனர்.

## 34. சகரஅகரம் மொழிமுதல் ஆகுமா? ஆய்க.

"சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔவெனும் மூன்றலங் கடையே."

என்பது நூற்பா. இதன்படி தொல்காப்பியர் காலத்தில், "ச, சை, சௌ" என்னும் மூன்றெழுத்துக்களும் மொழி முதலில் வரவில்லை என்பது புலனுகின்றது. இளம்பூரணர் நச்சர் இருவரும் இக்கருத்தின்படியே உரைஎழுதியுள்ளனர். ச்கடம் எனவும் சையம் எனவும் வருவன கடிசொல் இல்லை காலத்துப்படினே என்னும் விதிப்படி பிற்காலத்தியனவாகக் கொள்ளப்படுகின்றன.

இனி ஒருசிலர் கூறுமாறு: 1. சகரக்கிளவியும் அவற்றோ றற்றே, அவை ஔவென்னும் ஒன்றலங் கடையே" என்ற பாடவேறுபாடு உள்ளது. (2) சக்கட்டி சக்கை சகடு முதலிய நூற்றுக்கு மேற்பட்ட தனித்தமிழ்ச் சொற்கள் தொன்று தொட்டனவாய் உள்ளன. (3) சாப்பிடு என்னும் சொல் லும் சப்பு என்னும் மூலத்தினின்று தோன்றியதே. (4) செத்தான் என்னும் வினைமுற்றுப் பண்டைக்காலத்தில் சத்தான் என்றிருந்திருக்கவேண்டும். (5) செத்தான் என்பது தெலுங்கில் சச்சினுடு என்று கூறப்படுகிறது. (6) முழுமுதல் அரணம் அமைத்துக்கொண்ட தமிழர் சட்டி செய்யத் தெரியாதிருந்தனர் என்பது பெருநகைப்புக்கு இடமானதாகும். (7) சரி சமழ்ப்பு என்ற மயிலைநாதர் உரைமேற்கோளில் சம்முதலும் வை என்று வருகிறது. — எனவே தொல்காப்பியர் காலத்திலும் சகரஅகரம் மொழி முதற்கண் வந்ததேயாகும்.

ஆய்வு : (1) "அவைஔள வென்னும் ஒன்றலங் கடையே" என்பது பாடமாயின் அதனை இளம்பூரணரும் நச்சரும் காட்டாமற்போக நியாயமில்லை. மேலும், அவை என்னும் பன்மைச்சுட்டு சகரக்கிளவி என்னும் ஒருமையைத் தழுவாது; அற்று என்னும் ஒருமைவினையையும் தழுவாது. மற்றும், ஔ ஒன்றலங்கடை என்றால் ச, சை, இரண்டும் மொழி முதலாகும் என்று ஏற்படும். சகரத்துக்குக் காட்டியது போலச் சை என்பது மொழிமுதலாதற்கும் பல காரணங்கள் காட்டவேண்டும். இன்னும், தொல்காப்பியர் இயற்றிய நூற்பாக்களில் சாரியை, சினைநீடிய, சீர், சுட்டு, சூழ்ச்சி வாழ்த்தல், செய்யுளுள்உரித்து, சேஎன்மரப்பெயர், சொல்லியபள்ளி, சோர்வு, எனச்சகரம் ஒன்பது உயிர் களுடன் கூடி மொழிமுதலாக வந்ததற்கு உதாரணம் கிடைத்தாற்போல் சகரம் அ, ஐ, ஔ என்ற மூன்றுடன் கூடி மொழிமுதலாதற்கு ஒரு உதாரணம்கூட கிடைக்க வில்லை, ஆகவே, இப்பாடபேதம் பொருந்தாது.

(2) சக்கட்டி சக்கை முதலியன தனித்தமிழ்ச் சொற் களே ஆயினும் அவை தொல்காப்பியர் காலத்தில் வழங்கின என்பதற்கு யாதொரு ஆதாரமும் இல்லை. மேலும், அச் சொற்கள் சங்கவிலக்கியங்களுள்ளும் காண்டல் அரிதாக இருக்கின்றன. "சமன்செய்து" எனவும் "சலத்தால்" எனவும் திருக்குறளில் வருவனவும் வடமொழிச்சிதைவாய்த் தொல்-காப்பியர் காலத்துக்குப் பின் வந்தனவேயாம்.

(3) சாப்பிடு என்னும் சொல் பண்டைக்காலத்தில் வழங்கப்பெறவில்லை; அதற்கு ஈடாக உண்ணல், அயிறல் என்பனவே வழங்கின.

(4) செத்தான் என்னும் சொல் பண்டைக்காலத்தில் இறந்தான் என்னும் பொருள்தாராது; கருதினன் என்னும் பொருள்படும். இறந்தான் என்னும் பொருளில் துஞ்சினன் என்னும் சொல் வழங்கி வந்தது. திருக்குறளில் சிலவிடங் களில் இறந்தான் என்னும் பொருளில் வந்திருப்பதும் தொல்காப்பியர் காலத்துக்குப் பிந்திய வரவு என்பதைக் காட்டும்.

(5) தெலுங்கில் உள்ள சச்சினுடு என்பது திராவிட மொழிகளின் உறவை உணர்த்துமேயன்றித் தொல்காப்பியர் காலத்தில் சகரஅகரம் மொழிமுதலாகும் என்பதனைக்காட்டாது.

(6) தொல்காப்பியர் காலத்தமிழர் முழுமுதல் அரணத்தைச் செய்யத்தெரிந்திருந்ததோடு சட்டியையும் செய்யத் தெரிந்திருந்தனர். ஆனால் சட்டியைச் சட்டி என்று அழைக்காமல் மண்டை என்னும் வேறுபெயரான் அழைத்துவந்தனர். மண்டை என்னும் சொல்லைச் சங்க இலக்கியங்களுள் காணலாம். (இப்பெயர் தற்காலத்தில் மொந்தை எனத் திரிந்தது போலும்.)

(7) சரிசமழ்ப்பு என்னும் வெண்பாவினால் மயிலைநாதர் உணர்த்துவது தம்காலத்தில் சகரஅகரம் மொழி முதல் ஆகும் என்பதன்றித் தொல்காப்பியர் காலத்தில் மொழிமுதலாகும் என்பதையன்று.

— எனவே, தொல்காப்பியர் காலத்தில் சகரஅகரம் மொழிமுதலில் வரவில்லை என்பதும், பிறகு கடைச்சங்க காலத்தில் சமன், சலம் என்பதாக அருகி வரத்தலைப் பட்டது என்பதும், பிறகு படிப்படியாகப் பெருகி நூற்றுக்கு மேற்பட்ட சொற்களில் தற்காலத்தில் வழங்கி வருகின்றது என்பதும் புலனாகின்றன.

**35. மொழிமுதற்குற்றுகரம் பற்றிய நூற்பாக்களை எழுதி விளக்குக.**

### மொழிமுதற்குற்றுகரம்

1. குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்
   ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.
2. முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது
   அப்பெயர் மருங்கின் நிலையிய லான.

விளக்கம் : (1) குற்றியலுகரம் மொழிக்கு முன்னும் வருவதுண்டு. அது முறைப்பெயரிடத்தில் நகர ஒற்றின் முன்வந்த மற்றோர் நகர ஒற்றோடு கூடி மொழிக்கு முன் வரும். அதாவது நுந்தை என்ற சொல்லின் முதற்கண் உள்ளது; இக்குற்றுகரத்துக்கு இடம் முறைப்பெயர். பற்றுக்கோடு நகரமிசை நகரம். (இக்குற்றுகரம் புள்ளி பெறுது.)

(2) மொழியீற்றில் வரும் குற்றுகரமும் முற்றுகரமும் பொருளில் வேறுபடும். "விறகுக்கட்டு இல்லை" என்பதில் கட்டு என்பதன் உகரம் குற்றுகரம்; கட்டு என்னும் சொல் பொருட்பெயராய் வந்தது. இனி, "இவ்விறகைக் கட்டு" என்பதில் கட்டு என்பதன் உகரம் முற்றுகரம்; கட்டு என்னும் சொல் முன்னிலை ஏவல் வினையாய் வந்தது. ஆனல் நுந்தை என்னும் சொல்லில் உள்ள மொழிமுதல் உகரத்தைக் குற்றுகரமாய் ஒலித்தாலும் முற்றுகரமாய் ஒலித்தாலும் பொருளில் வேறுபாடு இல்லை.

(3) இனி இரண்டாம் நூற்பாவை இரட்டுறமொழிதலாகக் கொண்டு "பொருள் வேறுபடாது" என்பதற்கு இடனும் பற்றுக்கோடும் வேறுபடாது என்று கூறலும் ஆம்.

### 36. உகர ஊகாரம், எகர ஏகாரம், ஒகர ஓகாரம் ஆகிய உயிர்கள் எவ்வெம் மெய்களுடன் கூடி ஈருகா? (1959)

உகர ஊகாரம் இரண்டும் நகர வகரங்களுடன் கூடி (நு, நூ, வு, வூ என்ற நான்கும்) மொழியீற்றில் வாரா எனஇளம்பூரணரும், நச்சரும் உரைஎழுதினர். வு என்பது நவிலா என்ற மிகையால் ஈருகும் எனக்கொண்டனர்; நூ, எள் என்னும் பொருளில் வருதலானும், வு, கதவு வரவு என்பவற்றில் ஈருக வருதலானும் இவற்றை நீக்கி நு, வூ என்னும் இரண்டு மட்டும் மொழியீற்றில் வாரா என்பது பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் கருத்து.

எகரம் எந்த மெய்யுடனும் கூடி மொழியீருகாது.
ஏகாரம் ஞகர மெய்யுடன்கூடி மொழியீருகாது.
ஒகரம் நகர மெய்தவிர மற்ற மெய்களுடன்கூடி மொழியீருகாது.
ஓகாரம் ஞகர மெய்யுடன்கூடி மொழியீருகாது.

37. உ ஊ ஏ ஒ ஓ என்னும் இவ்வுயிர்கள் எவ்வெம்மெய்களோடு சேர்ந்து ஈற்றில் வாரா? (1961)

விடை 36-ல் காண்க.

38. "உ ஊகாரம் நவவொடு நவிலா" — உரைகளை ஆராய்க.

"உ ஊகாரம் நவவொடு நவிலா" — இது நூற்பா.

இளம்பூரணர் உரை: உகர ஊகாரம் இரண்டும் நகர வகரங்களுடன் கூடி (நு நூ வு வூ என்னும் நான்கெழுத்துக்களும்) மொழியீற்றில் வாரா. நவிலா என்றதனால் நொவ்வு கவ்வு எனச் சிறுபான்மையாக உகரம் ஈற்றில் வரும்.

நச்சினார்க்கினியரும் இக்கருத்தினரே. இவரும் நவிலா என்றதனானே கதவு துரவு என்பன பயின்றுவருதலும் கொள்க என்றார்.

இவ்வுரையாசிரியர் இருவரும் உறழ்ச்சி வகையால் நான்கெழுத்தும் மொழியீற்றில் வாரா என்றனர். பின்னர் அவற்றுள் ஒன்றுவரும் என்றனர்.

உண்மை உரை: உகரம் நகரத்தோடும், ஊகாரம் வகரத்தோடும் கூடி (நு, வூ என்னும் இரண்டும்) மொழியீற்றில் வாரா. இது நிரல்நிரை வகையான் கொண்ட உரை.

இவ்வுரையை அரசஞ்சண்முகனாரும், பி. சா. சுப்பிரமணிய சாத்திரியாரும் கூறுகின்றனர். நூ என்பது ஓரெழுத்தொருமொழியாய் வருகின்றது. வு என்பதை

ஈற்றில் வைத்துத் தொல்காப்பியர் தாமே தமது நூற்பாக்களில் — அளவு ஃளவு என்னும் சொற்களில் — கையாண்டுள்ளனர். (நூ=எள்)

39. "னகரத் தொடர்மொழி ஒன்பஃ தென்ப" — இத்தொடர்க்கு விளக்கம் தருக.

மகரத் தொடர்மொழியாய் மயங்குதலினின்று நீங்கிய னகரத் தொடர்மொழி ஒன்பது என்று கூறுவார்கள்; அவை அஃறிணை இடத்தனவாம்.

என்ப என்பதனுல் இது பிறன்கோட் கூறல் என்பது விளங்குகிறது. இனி இது பிறன்கோட்கூறி உடன் பட்டதோ மறுத்ததோ எனின் மறுத்தது எனவே கொள்ளத் தகும். ஒன்பது என்று தொகை கூறிய ஆசிரியர் அவை யாவை என்று விளக்காமையானும், இவ்வரையறையைப் பின் புள்ளிமயங்கியலில் கையாளாமையானும், இவ்வரை யறையாற் போந்த பயனின்மையானும் இது பிறன்கோட் கூறி மறுத்ததெனவே படும்.

இனி ஒன்பது என்பதற்கு உகின் செகின் விழன் பயின் அழன் புழன் குயின் கடான் வயான் என இளம்பூரணர் விளக்கம் தந்தனர். பின்பு அவரே ஐயப்படுவாராய் இவற்றுள் திரிபுடையன களைக என்று எழுதினுர். இளம்பூரணர் காட்டியவற்றுள் சிலவற்றை நீக்கி வேறு சிலவற்றைக் கூட்டி நச்சர் விளக்கம் கூறினுர். இவர்கள் காட்டியனவேயன்றிப் பலியன் வலியன் அலவன் முதலியனவாகப் பல சொற்கள் உளவாதலின் ஒன்பது என்னும் வரையறை பொருந்தாதென மயிலைநாதர் மறுக்கின்ருர். இனித் தொல்காப்பியர் சூத்திரங்களில் கையாண்ட எகின், அழன், புழன், குயின் என்னும் நான்கு சொற்களைத்தவிரப் பிற ஐந்து சொற்கள் யாவை என்பதை இப்போது அறுதியிட்டுக் கூற முடியவில்லை.

அஃறிணைச் சொற்களில் னகர ஈற்ருன் முடியும் சொற்கள் சில மகர ஈருக மயங்குவன உண்டு (அகன் – அகம்; குளன் – குளம்) எனவும், மகர ஈருய் மயங்காமல் னகர

ஈருகவே இருப்பன ஒன்பது எனவும் தொல்காப்பியர் குறிப்பிட்டார். அதாவது னகர ஈறு மகர ஈருகின்றன என்பது தொல்காப்பியர் கருத்து.

நன்னூலார் மகர ஈறு னகர ஈருக மாறுகின்றன எனவும் அவை போலி எனவும் முறைமாற்றி உரைத்தார். (அகம் - அகன்; குளம்-குளன்.)

40. பால்பகாஅஃறிணை மகர வீற்றுச் சொற்களோடு மயங்காதென்று வரையறை செய்யப்பெற்ற மொழிகள் ஒன்பதினையும் தருக. (1955)

விடை 39-ல் காண்க.

41. "னகரத்தொடர்மொழி ஒன்பஃதென்ப, புகரறக்கிளந்த அஃறிணைமேன."— இங்குக்குறித்த ஒன்பதாவன யாவை? விளக்குக. (1957)

விடை 39-ல் காண்க.

42. எழுத்துக்களின் பொதுப்பிறப்பை எழுதுக.

எழுத்துக்களின் பொதுப்பிறப்பு: தமிழ் எழுத்துக்கள் எல்லாம் சொல்லப்படுங்காலத்தில் உந்தி (கொப்பூழ்) முதலாக மேல்நோக்கி எழுந்த (உதானன் என்னும்) காற்று, தலைமிடறு நெஞ்சு இவ்விடங்களில் நிலைபெற்றுநின்று பல் இதழ் நா மூக்கு அன்னம் என்னும் உறுப்புக்கள் ஒன்றுடன் ஒன்று இயையப் பிறப்பனவாம். அப்பிறப்பு வெவ்வேறு வகைப்படும்.

43. "தத்தம் திரிபே சிறிய என்ப" – என்னும் நூற்பா புறனடையா? சிங்கநோக்கா? ஆய்க.

தத்தம் திரிபே சிறிய என்ப என்னும் நூற்பா முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் ஓர் புறனடை கூறுதல் நுதலிற்று என்று இளம்பூரணர் எழுதினர். இது

முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் பொதுவிதி கூறிச் சிங்கநோக்காகக் கிடந்தது என்று நச்சர் எழுதினுர். இளம்பூரணர், "முற்கூறியஉயிர்க்கும் மேற்கூறும்மெய்க்கும்" என்று எழுதியபின் அதனைப் புறனடை என்று எழுதியது வியப்பளிக்கின்றது. அது அவர் கருத்துப்படி சிங்கநோக்காகுமே அன்றிப் புறனடை ஆகாது.

"பிற்கூறும் மெய்களின் வேறுபாடு அவ்வச் சூத்திரங்களில் விளங்கிக் கிடக்கின்றனவாகலின், இந்நூற்பா முற்கூறிய உயிர்கட்குமட்டுமே வேறுபாடு கூறுவதாகும். எனவே இது புறனடையாகும்" என்று வே. வேங்கடராஜுலு ரெட்டியாரும், பி. சா. சுப்பிரமணிய சாத்திரியாரும் கருதுகின்றனர்.

அஆ என்பன அங்காத்தலானும், இஈஎஏஐ என்பன அங்காப்போடு அண்பல்லே நாமுதல் விளிம்பு உறலானும், உஊ ஒஓ ஔ என்பன இதழ்குவிதலானும் பிறக்கின்றன. மூன்று முயற்சியினுல் 12 உயிர்கள் பிறக்கின்றன எனின் வேறுபாடு தெரியவேண்டும்அன்ரே ? அதனுல் வேறுபாடு தெரிவிக்கத் தத்தம் திரிபே சிறிய என்னும் நூற்பாவைத் தொல்காப்பியர் கூறினுர்.

கங, சஞ, டண, தந, பம, றன என்பன பிறப்பதற்கு ஆறு முயற்சிகள் கூறப்பட்டன. ஆறு முயற்சியில் இப்பன்னிரண்டு எழுத்துக்கள் பிறந்தாலும் இவற்றின் வேறுபாட்டை "வல்லினம் தலேவளியாற் பிறக்கும், மெல்லினம் மூக்குவளியாற் பிறக்கும்" என்பதனுன் உணரலாகும். எனவே இம்மெய்களுக்குத் "தத்தம் திரிபே" என்ற நூற்பா வேண்டுவதில்லே.

ய வ ல ள என்பன பிறப்பதற்குத்தனித்தனி முயற்சிகள் கூறப்படுதலின் இம்மெய்களுக்கும் தத்தம் திரிபே என்ற நூற்பா வேண்டுவதில்லே.

இனி ஒழிந்த ரகரமும் ழகரமும் "நாநுனி மேனேக்கிச் சென்று அண்ணம்வருடல்" என்ற ஒருமுயற்சியில் பிறக்கும்

என்றலின் இவற்றின் வேறுபாடு அறியவேண்டும். இவ்விரண்டு மெய்களின் வேறுபாடறியத் "தத்தம் திரிபே" என்னும் நூற்பா வேண்டும்.

எனவே, தத்தம் திரிபே என்னும் நூற்பா மேற்கூறிய 12 உயிர்க்கும் பிற்கூறும் ர ழ என்னும் 2 மெய்க்கும் வேறுபாடு கூறுதலின் சிங்கநோக்கு என்பதே பொருந்தும்.

44. அண்பல், அண்ணம் — இவற்றை இடமாகக்கொண்டு பிறக்கும் எழுத்துக்கள் எவ்வெவை? அவை பிறக்குமாறு யாது? (1958)

அண்பல்லை இடமாகக்கொண்டு இஈஎஏஐ என்ற ஐந்து உயிர்களும், லள என்ற இரண்டு மெய்களும் பிறக்கின்றன. அண்பல்லை நாமுதலின்விளிம்பு சென்று பொருந்தியவுடன் இஈஎஏஐ என்பன பிறக்கின்றன. அன்பல்லின் இடத்தை நாவிளிம்பு தடித்துச்சென்று பொருந்தி நிற்க நாநுனி அண்ணத்தைஒற்ற லகரமும், வருட ளகரமும் பிறக்கின்றன.

அண்ணத்தை இடமாகக்கொண்டு கங, சஞ, டண, தந, றன, ரழ, லள, ய என்னும் 15 மெய்கள் பிறக்கின்றன. முதல் நாவும், முதல் அண்ணமும் பொருந்தக் கங்க்களும், இடை நாவும் இடை அண்ணமும் பொருந்தச் சஞக்களும், நுனி நாவும் நுனி அண்ணமும் பொருந்த டணக்களும் பிறக்கின்றன. அண்ணத்தோடு பல்லின் அணிய இடத்தை நாநுனி பறந்து ஒற்றத் தநக்கள் பிறக்கின்றன. நாநுனி மேல்நோக்கி அண்ணத்தைவருட ரழக்களும் பிறக்கின்றன. அண்பல்லின் இடத்தை நாவிளிம்பு தடித்துச் சென்று பொருந்தி நிற்க நாநுனி அண்ணத்தை ஒற்ற லகரமும், வருட ளகரமும் பிறக்கின்றன. அண்ணத்தை நாக்குச் சென்று பொருந்த மிடற்றுவளிவரும்பொழுது யகரம் பிறக்கிறது.

45. இதழை இடமாகக்கொண்டு பிறக்கும் எழுத்துக்கள் எவ்வெவை? அவை பிறக்குமாறு யாது?

இதழை இடமாகக்கொண்டு உஊஒஓஔ என்ற ஐந்து உயிர்களும், பமவ என்ற மூன்று மெய்களும் பிறக்கின்றன. இதழ்கள் ஒன்றேடொன்று இயையும்போது பமக்களும், மேற்பல்லும் கீழ் இதழும் பொருந்த வகரமும் பிறக்கின்றன.

46. சார்பெழுத்துக்கள் பிறக்குமாற்றை எழுதுக.

குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றும் சில எழுத்துக்களைச் சார்ந்துவரின் அல்லது தாமே இயங்கும் இயல்புடையனவல்ல. எனவே இவை சார்பெழுத்துக்கள் எனப்பட்டன. இவை எவ்வெழுத்தைச் சார்பாகப் பெறுகின்றனவோ அவ்வெழுத்தின் பிறப்பையே தமக்கும் உரிய பிறப்பாகக் கொள்ளுகின்றன.

அதாவது குற்றியலிகரமும் குற்றியலுகரமும் தாம் ஏறி நிற்கும் வல்லொற்றுக்களின் பிறப்பிடத்தையே தம் பிறப்பிடமாகக் கொள்ளுகின்றன. ஆய்தம் அவ்வாறு ஒரு எழுத்தில் ஏறி நில்லாமையின் தனக்குப்பின்வரும் வல்லெழுத்தின் பிறப்பிடத்தையே தன் பிறப்பிடமாகக் கொள்ளுகிறது.

அளபெடையையும், உயிர்மெய்யையும் தொல்காப்பியர் சார்பெழுத்தாகக் கொள்ளாவிடினும் கூறுகின்ருர் ஆகலான் அவை பிறக்குமாற்றையும் நோக்குவோம். இவ்வெழுத்துக்கள் தமக்கு அடியாகிய (காரணமாகிய) எழுத்துக்களின் பிறப்பிடமே இடமாகக் கொள்ளுகின்றன. இதனைத் "தம்மியல்பியலும்" என்ற இலேசான் இளம்பூரணர் கொண்டார்; மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்றி முடித்தல் என்ற உத்தியான் நச்சர் கொண்டார்.

47. எழுத்துக்களுக்கு மாத்திரை கொள்ளும் முறையில் உள்ள வேறுபட்ட கருத்துக்களை எழுதுக.

உந்திமுதலா எழுந்து தலைகாறும் சென்று மீண்டு நெஞ்சில் நிலைபெற்று ஒலிக்கும் வளியின் இசையை மாத்திரையாகக் கொள்வது பார்ப்பார் வேதத்துக்கண்ணது. (அதாவது உந்தியில் தோன்றுவது முதல் இசைப்பது வரையுள்ள காலத்தை மாத்திரையாகக் கொள்வது வட மொழிமுறை.)

இதனைத் தொல்காப்பியர் வேண்டார்; வாயின்புறத்தே எழுந்து ஒலிக்கும் இசையே மாத்திரை எனத் தொல்காப்பியர் கருதுவார். (அதாவது ஓர்எழுத்து உச்சரிக்கப்பட்டு அது தோன்றி மறையும் காலக்கேட்டினை மாத்திரையாகக் கொள்வது தமிழ்முறை.)

48. புணரியலில் கூறப்பட்ட கருவிகளின் பெயர்களைத் தொகுக்க.

<u>புணரியலில் கூறப்பட்டவை</u>

1. மொழியீறு (மெய்யீறு, உயிரீறு)
2. மொழிமுதல் (மெய்ம்முதல், உயிர்முதல்)
3. நிறுத்தசொல் } புணர்நிலைச்சுட்டு
4. குறித்துவருகிளவி }
5. திரிபு மூன்று (மெய்பிரிதாதல், மிகுதல், குன்றல்) } மொழிபுணர் இயல்பு
6. இயல்பு ஒன்று ... ... }
7. அடைமொழி
8. மரூஉ மொழி
9. வேற்றுமைப் புணர்ச்சி
10. அல்வழிப் புணர்ச்சி
11. வேற்றுமை உருபு ஆறு
(ஐ ஒடு கு இன் அது கண்)

12. சாரியை மொழி (இன் வற்று முதலியன)
13. எழுத்தின் சாரியை (கரம் காரம் கான்)
14. உடம்படுமெய்
15. எழுத்தோரன்ன பொருள் தெரிபுணர்ச்சி

**49. "இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது; அறுநான்கு ஈறு" — எண்களை விளக்குக.**

இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது என்பது மொழிக்கு முதலில் வரும் இருபத்திரண்டு எழுத்துக்களைக் குறிக்கின்றது.

| | |
|---|---|
| அவை ;— உயிர் | — 12 |
| மெய் | — 9 (கசதநபமவயஞ) |
| மொழிமுதற்குற்றுகரம் | — 1 |
| ஆக | 22 |

அறுநான்குஈறு என்பது மொழிக்கு இறுதியில் வரும் இருபத்திநான்கு எழுத்துக்களைக் குறிக்கின்றது.

| | |
|---|---|
| அவை :— உயிர் | — 12 |
| மெய் | — 11 (ஞண் நம்ன், யர்ல்வ்ழ்ள்) |
| மொழியிறுதிக்குற்றுகரம் | — 1 |
| ஆக | 24 |

**50. "மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்" என்றவர் மீண்டும், "மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்" என்றது எதன்பொருட்டு? (1958)**

மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் என்னும் நூற்பா தனிமெய்கள் புள்ளிபெற்று நிற்கும் என்பதையும், அவ்வாறு புள்ளிபெறுதல் அவற்றுக்கு இயற்கை என்பதையும், இதனால் உயிர்மெய்கள் புள்ளிபெறா என்பதனையும் விளக்க வந்தது.

மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல் என்னும் நூற்பா மொழியின் மெய்யீறு புள்ளிபெற்று நிற்கும் என்பதையும், இதனால் மொழியின் மெய்ம்முதல் புள்ளிபெறா என்பதையும், மெய்ம்முதல் உயிர்மெய் எழுத்தாகவே இருக்கும் என்பதையும் விளக்க வந்தது.

முன்னர் ஒரு கருத்தைப்பற்றி மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் என்றவர், பின்னர் வேறு ஒரு கருத்தை விளக்குவதற்காக மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல் என்றார். (இதனால் இவற்றைக் கூறியதுகூறல் எனல் ஆகாது.)

51. "குற்றிய லுகரமும் அற்றென மொழிப"— இதன் உரைகளை ஆய்க.

குற்றியலுகரமும் அற்றென மொழிப — இது நூற்பா.

இளம்பூரணர் உரை: ஈற்றுக்குற்றுகரமும் மெய்யீற்றைப் போலவே உயிர் ஏற இடங்கொடுக்கும். இம்மாட்டேறு ஒருபுடைச் சேறல்.

நச்சினார்க்கினியரும் இவ்வாறே உரைத்தார்.

உண்மை உரை: ஈற்றுக்குற்றுகரமும் மெய்யீற்றைப் போலவே புள்ளிபெற்று நிற்கும். (மொழிமுதற் குற்றுகரம் மெய்ம்முதலைப்போல் புள்ளிபெறா.)

ஆய்வு: (1) மாட்டேறு என்பது முந்திய நூற்பாக்களைத் தழுவுமேயன்றிப் பிந்திய நூற்பாக்களைத் தழுவாமையின் மூன்றும் நூற்பாவை முப்பத்தாறும் நூற்பாவுடன் மாட்டெறிதல் பொருந்தாமையானும், (2) உரையாளர் இருவரும் தமது உரைகளை ஒருபுடை மாட்டேறு எனத் தாமே தளர்ந்து உரை கூறலானும், (3) எகரஒகரத் தியற்கையும் அற்றே என்ற நூற்பாவை மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் என்ற முந்திய நூற்பாவுடன் மாட்டெறிந்து உரைவகுத்த ஆசிரியர்கள் ஈண்டும் அவ்வாறே உரை வகுக்க வேண்டுமாகலானும், (4) குற்றுகரம் உயிர் ஏற

இடம் கொடுக்கும் என்பதனைப் "புள்ளியீற்றுமுன்" என்ற நூற்பாவின் உம்மையால் கொள்வதால் ஈண்டும் கொள்வது கூறியதுகூறலாமாகலானும் — இளம்பூரணர், நச்சர் உரை பொருந்தா.

இனிக் (1) குற்றுகரம் புள்ளிபெறும் என்பது சங்க யாப்புடையார், பேராசிரியர், சங்கரநமச்சிவாயர், சிவஞான முனிவர் போன்ற பலர்க்கும் கருத்தாகலானும், (2) நூன் மரபு இரண்டாம் சூத்திரத்தில் ஆசிரியர் தொல்காப்பியர் தாமே குற்றுகரம் புள்ளிபெறும் என்பதைக் குறித்தமை யானும், (3) ஈண்டும் புள்ளிபெறும் என்றது மொழியீற்றுக் குற்றுகரம் புள்ளி பெறும் என்று கூறுமுகத்தான் மொழி முதற் குற்றுகரம் புள்ளிபெரு என்பதை விளக்குதற்காகலா னும், (4) மாட்டேறு இதற்குப் பொருந்துதலானும், (5) தற்கால ஆய்வாளரான வே. வேங்கடராஜுலு ரெட்டியார், ஞா. தேவநேயப்பாவணர் போன்றவர்கட்கும் இதுவே கருத்தாகலானும், — "ஈற்றுக்குற்றுகரமும் மெய் யீற்றைப்போலப் புள்ளிபெறும்" என்னும் உரையே உண்மை உரையாம்.

**52. "வேற்றுமை தாமே ஏழென மொழிப" என்றும், "விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே" என்றும் கூறுகின்ற தொல்காப்பியர், "அவ்வாறென்ப வேற்றுமை உருபே" என்றதற்குக் காரணம் என்ன? 1958)**

(அ) "அவ்வாறென்ப வேற்றுமை உருபே" என்னும் நூற்பா எழுத்ததிகாரத்தில் புணரியலில் புணர்ச்சிக் கருவி கூறுமிடத்து வேற்றுமை என்னும் கருவியை விளக்க வந்தது. வேற்றுமை எட்டெனினும் முதல் வேற்றுமைக்கும் எட்டாம் வேற்றுமைக்கும் உருபில்லையாகலின் அவை இரண்டையும் நீக்கி எஞ்சி நின்ற ஆறுக்கும் உருபுண்டாக லின், "அவ்வாறென்ப வேற்றுமை உருபே" என்றார். இதில் உருபு என்னும் சொல்லில் பொருளழுத்தம் உள்ளது.

(ஆ) "வேற்றுமைதாமே ஏழெனமொழிப" என்னும் நூற்பா சொல்லதிகாரத்தில் வேற்றுமையியலில் வேற்றுமைக்குத் தொகை கூறுமிடத்துப் பிறன்கோட் கூறும்வழி வந்தது. வேற்றுமைகளில் எட்டாம் வேற்றுமையானது பெயரதுவிகாரமேயாகலின் அதனை எழுவாய்வேற்றுமையுள் அடக்கி வேற்றுமை ஏழென்று கூறுவது ஐந்திரம் முதலிய வடமொழி இலக்கண நூலுக்கு உடன்பாடு என்பதற்காக, "வேற்றுமைதாமே ஏழென மொழிப" என்றார். இந்நூற்பாவில் மொழிப என்னும் சொல்லில் பொருளழுத்தம் உள்ளது.

(இ) "விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே" என்னும் நூற்பா சொல்லதிகாரத்தில் வேற்றுமையியலில் வேற்றுமைக்குத் தொகை கூறுமிடத்துத் தன்கோட்கூறும் வழி வந்தது. படர்க்கைப் பொருளை முன்னிலைப் பொருளாக வேறுபடுத்தும் காரணம் பற்றி விளியையும் ஒரு வேற்றுமையாகக்கொண்டு வேற்றுமை எட்டாகும் என்னும் தன் கருத்தை வற்புறுத்துதற்காகத் தேற்றேகாரம் கூட்டி "விளிகொள்வதன்கண்விளியோடெட்டே" என்றார். இந்நூற்பாவில் எட்டே என்னும் சொல்லில் பொருளழுத்தம் உள்ளது.

எனவே, மூன்று நூற்பாக்களிலும் வரும் ஆறு, ஏழு, எட்டு என்னும் தொகைகள் முறையே உருபுகளையும், பிறன் கோளையும், தன்கோளையும் உணர்த்துவதனால் இந்நூற்பாக்கள் ஒன்றற்கொன்று முரண்படுவனவல்ல என்பதும், தொல்காப்பியர் ஒவ்வொரு நூற்பாவையும் ஒவ்வொரு நோக்கம் (காரணம்) பற்றியே செய்வார் என்பதும் புலனாகின்றன.

53. மேல் வேற்றுமை எட்டென்பார், "அவ்வாறென்ப வேற்றுமை உருபே" என்பது பொருந்துமா? தெளிவுபடுத்துக. (1955)

விடை 52-ல் காண்க.

54. ஆறன் உருபின் அகரக்கிளவி கெடும் என்னுது ஏறிமுடியும்என்ருல் வரும்குற்றம் என்னே?

நாம் என்னும் சொல்லொடு அது என்னும் ஆரும் வேற்றுமை உருபு புணருங்கால் நாம்—நம் என நெடுமுதல் குறுகும் எனவும், குற்றெற்று இரட்டாதெனவும், ஈருகு புள்ளி அகரமொடு சிவணி நம என்ருகும் எனவும், அது என்னும் ஆறன் உருபின் அகரக் கிளவி கெட்டு நம என்பத னுடன் கூடி நமது என முடியும் எனவும் தொல்காப்பியர் விதி கூறுவர்.

இவ்வாறு நிறுத்த சொல்லில் ஒரு அகரத்தை வருவிப் பதும், குறித்து வருகிளவியில் ஒரு அகரத்தைக் கெடுப்ப தும் ஏன்? ஆறன் உருபின் அகரக் கிளவி கெடாது ஏறி (நம் + அது =) நமது என்று முடியும் என்ருல் வரும் குற்றம் என்னே? என்பது கடா.

இவ்வாறு ஆறன் உருபின் ஒருமை உருபு அது என்பது ஏறி முடியும் என்று கூறலாமேனும், பன்மை உருபு அ என்பது ஏறி முடிவதில்லே; நிறுத்த சொல்லில் வேறெரு அகரம் வருவிக்க வேண்டி உள்ளது. ''நினவ கூறுவல் எனவ கேண்மதி'' என இலக்கியத்துள் வந்தன. (நின் + அ > நின் + அ + அ = நினவ. என்+அ> என்+அ+அ=எனவ.) இனி ஆரும் வேற்றுமையேயன்றி நான்காம் வேற்றுமை உருபிற்கும் நிலேமொழியில் அகரப் பேறு கூறவேண்டி உள்ளது. (நின் + கு > நின் + அ + கு= நினக்கு.) நான்காம் ஆரும் வேற்றுமை வரும்போது நிலேமொழியில் வரும் அகரத்தைப் பொதுவிதியாக்கி, ஆறன் ஒருமை அது என்பதற்கு அகரக் கேட்டைச் சிறப்பு விதியாக்கி உரைத்தார். அல்லாக்கால் அதுவின் அகரம் ஏறி முடியும் எனவும், நான்காம் வேற்றுமைக்கு அகரம் வரும் எனவும், ஆறன் பன்மைக்கும் அகரம் வரும் எனவும் சூத்திரங்கள் பல்குதலாகிய குற்றம் வரும்.

55. சாரியை மொழிகள் யாவை?

## சாரியை மொழிகள்

| | | |
|---|---|---|
| 1. இன் | 4. அம் | 7. அக்கு |
| 2. வற்று | 5. ஒன் | 8. இக்கு |
| 3. அத்து | 6. ஆன் | 9. அன் |

பிறவும் என்றதனுல் கொள்ளப்படுபவை: தம், நம், நும், எம், கெழு, ஏ, ஐ, ஞான்று முதலியன. (குலேயலங் காந்தள் என்பதில் அலம் என்பது சாரியையன்ருே எனின் அது அலங்கு காந்தள் என்பதன் விகாரமாகலின் சாரியை யன்று.)

56. எழுத்தின் சாரியைகள் யாவை? அவை எங்ஙனம் வருகின்றன?

## எழுத்தின் சாரியை

| | |
|---|---|
| 1. கரம் | 4. ஆனம் |
| 2. காரம் | 5. ஏனம் |
| 3. கான் | 6. ஓனம் |

நெட்டெழுத்துக்கள் காரச்சாரியை மட்டுமே பெறும். கரம் கான் சாரியை பெறுவதில்லே. (எ-டு) ஆகாரம், காகாரம். குற்றெழுத்துக்கள் கரம் காரம் கான் என மூன்று சாரியையும் பெறும். (எ-டு) அகரம், அகாரம், அஃகான். ஐ ஔ என்னும் இரண்டு நெட்டெழுத்துக்கள் காரம் என்பதோடு கான் சாரியையும் பெறும். (எ-டு) ஐகாரம், ஐகான், ஔகாரம், ஔகான். ஆய்த எழுத்து ஏனம் என்னும் சாரியை பெறும் (எ-டு) அஃகேனம். (ஆனம் ஓனம் என்பன இளம்பூரணர் நச்சர் என்போரால் குறிக்கப்பட்டுள்ளனவே ஒழிய அவற்றுக்கு எடுத்துக் காட்டுக் கிடைத்தில.)

57. நிலைமொழி வருமொழிப் புணர்ச்சிகளின் இடையே வரும் அக்கு, இக்கு, வற்று என்னும் சாரியைகள் முடிவில் எந்நிலையடைகின்றன? அவற்றிற்கு ஓவ்வோர் எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக. (1959)

## அக்குச்சாரியை

நிலைமொழி வருமொழிப் புணர்ச்சியின் இடையே வரும் அக்குச் சாரியை எவ்வகைப்பட்ட பெயர்க்கு முன் வரினும், சாரியையின் ஈற்றுக்குற்றுகரமும் அது ஏறி நின்ற மெய்யும், அதற்குமுன் நின்ற மெய்யும் கெட்டு முடியும். (அதாவது அக்கு என்பது அ என நிற்கும்.)

(எ–டு) குன்று + அக்கு + கூகை
குன்று + அ (க் க் உ) + கூகை
குன்று + அ + கூகை = குன்றக்கூகை.

## இக்குச் சாரியை

நிலைமொழி வருமொழிப் புணர்ச்சியின் இடையே வரும் இக்குச் சாரியை இகர ஐகார ஈறுகளின் முன் வரும்போது இகரம் கெட்டு முடியும். (அதாவது இக்கு என்பது க்கு என நிற்கும்.)

(எ–டு) ஆடி + இக்கு + கொண்டான்
ஆடி + (இ) க்கு + கொண்டான்
= ஆடிக்குக் கொண்டான்.

## வற்றுச் சாரியை

நிலைமொழி வருமொழிப் புணர்ச்சியின் இடையே வரும் வற்றுச் சாரியை அவை என்னும் சுட்டுச் சொல்லின் முன் வரும்போது வகரமெய் கெட்டு முடியும். (அதாவது வற்று என்பது அற்று என நிற்கும்.) மற்ற பிற சொற்களின் முன்

வரும்போது நிலைமொழியின் ஈற்றுமெய்யைக் கெடுத்துத் தான் கெடாது நிற்கும்.

(எ-டு) 1. அவை + வற்று + ஐ
அவை + (வ்) அற்று + ஐ = அவையற்றை,
2. அவ் + வற்று + கோடு
அ(வ்) + வற்று + கோடு = அவற்றுக்கோடு.

58. ஆடிக்குக்கொண்டான் (1953, 1959, 1960), பரணியாற் கொண்டான் (1959), கலத்துக் குறை (1960)—இவற்றுக்குப் பொருளும் புணர்ச்சி விதியும் தருக.

ஆடிக்குக்கொண்டான்

ஆடித்திங்களின்கண் கொண்டான் என்பது பொருள். "திங்கள் முன்வரின் இக்கே சாரியை." என்ற விதிப்படி ஆடி என்பதன்முன் இக்குச்சாரியை வந்தது. பின் "இக்கின் இகரம் இகரமுனை அற்றே." என்ற விதிப்படி இக்குச்சாரியையின் இகரம் கெட்டு முடிந்தது.

ஆடி + இக்கு + கொண்டான்
ஆடி + க்கு + கொண்டான் = ஆடிக்குக்கொண்டான்.

பரணியாற்கொண்டான்

பரணி நாளின்கண் கொண்டான் என்பது பொருள். "நாள் முன் தோன்றும் தொழில்நிலைக் கிளவிக்கு, ஆனிடை வருதல் ஐயமின்றே." என்ற விதிப்படி பரணி என்னும் நாட்பெயர்முன் ஆன் சாரியை வந்தது. "ஆனின் னகரமும் அதனோ ரற்றே, நாள்முன் வரூஉம் வன்முதற் றொழிற்கே." என்றவிதிப்படி ஆனின் னகரம் றகரமாய் முடிந்தது.

பரணி + ஆன் + கொண்டான்
பரணி + ஆற் + கொண்டான் = பரணியாற்
கொண்டான்.

## கலத்துக்குறை

ஒரு கலமும் அதற்குக் குறைவான சிறிதளவும் என்பது பொருள். (தற்காலத்தில் ஒரு கலஞ் சொச்சம் என்ற வழக்குப் போன்றது.) "அத்திடைவரூஉம் கலமென் அளவே" என்ற விதிப்படி கலன் என்பதன் முன் அத்துச் சாரியை வந்தது. "அத்தேவற்றே ஆயிருமொழிமேல் ஒற்றுமெய் கெடுதல் தெற்றென்றற்றே" என்ற விதிப்படி கலன் என்பதன் ஈறு கெட்டது. "அத்தின் அகரம் அகர முனையில்லை" என்ற விதிப்படி அத்துச் சாரியையின் அகரம் கெட்டது. "அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே" என்ற விதிப்படி வல்லெழுத்து மிக்கு முடிந்தது.

கலன் + அத்து + குறை
கல (ன்) + அத்து + குறை
கல + (அ) த்து + குறை
கல + த்து + க் + குறை = கலத்துக்குறை.

59. உடம்படுமெய் கூறிய நூற்பா யாது? அதன் உரைகளை ஆய்க.

"எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்"

என்பது உடம்படுமெய் கூறிய நூற்பா.

இந்நூற்பாவுக்கு "மூவகைப்பட்ட மொழிக்கும் உயிர் முதன்மொழி வருமிடத்து இடை உடம்படுமெய் வடிவு கோடலை நீக்கார்" என்று இளம்பூரணர்உரை கூறுகின்றார். ஈண்டு இவர் மூவகைப்பட்ட மொழி என்று குறித்தது ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி, இரண்டிறந் திசைக்கும் தொடர்மொழி என்னும் பாகுபாட்டினைப் போலும். இப்பாகுபாட்டினால் ஈண்டுப் பயனின்மையா னும், அதற்கேற்ப அவர் உதாரணம் காட்டாமையானும் இவர் மூவகை என்றதன் உட்கருத்து விளங்கவில்லை.

இனி, '' நிலைமொழியும் வருமொழியுமாய்ப் புணரும் எவ்வகை மொழிக்கும் உயிர் முதன்மொழி வருமிடத்து உடம்படு மெய்யினது வடிவை உயிரீறு கோடலை நீக்கார்; கொள்வர். '' என்று நச்சர் உரை கூறுகின்ருர்.

இனி, ''உயிரீறு, மெய்யீறு, குற்றுகர ஈறுஎன மூவகைப் பட்ட ஈற்ருன் வரும் எல்லா மொழிக்கும் உயிர் முதன் மொழி வரும்போது உடம்படு மெய்யின் வடிவு கொள்வதை நீக்கார் ஆசிரியர். '' என்பதும் ஓர் உரை. (எ-டு) 1. மணி + அழகு = மணியழகு (உயிரீற்றின்முன் உயிர்வர யகர உடம்படுமெய் வந்தது.) 2. விண் + அத்து + கொட்கும் = விண்வத்துக்கொட்கும். (மெய்யீற் றின் முன் உயிர் வர வகர உடம்படுமெய் வந்தது.) 3. வன்கணது + ஏ = வன்கணதுவே. (குற்றியலுகர ஈற்றின் முன் உயிர்வர வகர உடம்படுமெய் பெற்றது. திருக்குறள் 764-ன் பரிமேலழகர் உரை காண்க.)

ஆய்வு: எல்லாமொழிக்கும் என்ற தொடருக்கு '' மூவகைப் பட்ட மொழி என இளம்பூரணரும், நிலைமொழி வருமொழி என நச்சரும் உரை எழுதினர். இளம்பூரணர் மூன்று என்ற தொகையை விளக்கிற்றிலர்; மூவகை என்பதற்கேற்ப உதாரணமும் காட்டிற்றிலர். இனி நச்சர் வருமொழி என்று உரைத்தது பொருந்தாது; எல்லா மொழியும் என்பது ஈண்டு நிலைமொழியை மட்டுமே குறித்த லின். இனி இவ்வுரையாளர் இருவரும் எல்லா மொழியும் என்பதனை உயிரீற்று மொழியாக மட்டும் கொண்டனர். இதுவே தொல்காப்பியர்க்குக் கருத்தாயின், '' உயிரிறு மொழிமுன் உயிர் வரு வழியே '' என்று சூத்தரிக்க வேண்டு மன்றி (எல்லா ஈற்றையும் தழுவி) '' எல்லா மொழிக்கும் '' என்று சூத்தரிக்க நியாயமில்லை. எனவே இளம்பூரணர் நச்சர் உரைகள் பொருந்தா என்பதும் மூன்ருவது உரையே பொருந்தும் என்பதும் புலனுகின்றன.

60. எழுத்தோரன்ன பொருள் தெரிபுணர்ச்சி முன்னப் பொருளவாயின் — அவற்றை அறியுமுறை உதாரணமுகத்தான் விளக்குக. (1955)

சில சொற்கள் கூடுவதால்வரும் ஒரு தொடரும், மற்றும் சில சொற்கள் கூடுவதால் வரும் ஒரு தொடரும் எழுத்துக்களின் அளவில் ஒன்றுபட்டிருந்து வெவ்வேறு பொருள் விளங்கிக்கிடக்குமாயின் அத்தொடரை எழுத்தோரன்ன பொருள் தெரிபுணர்ச்சி என்பர். (அதாவது எழுத்து ஒரு தன்மையவான பொருள் விளங்கிக்கிடக்கும் புணர்மொழி என்பது பொருள்.)

(உ–ம்) 1. குன்று + ஏறு + ஆமா = குன்றேறுமா.
குன்று + ஏறு + மா = குன்றேறுமா.
2. செம்பு + ஒன்பதின் + தொடி
= செம்பொன்பதின்றொடி.
செம்பொன் + பதின்தொடி
= செம்பொன்பதின்றொடி.

ஈண்டுக் காட்டப்பெற்ற குன்றேறுமா, செம்பொன் பதின்றொடி என்பன எழுத்தளவில் ஒன்றுபட்டிருக்கின்றன. ஆனால் அவை உண்டாவதற்குக் காரணமான சொற்கள் வேறுபட்டிருக்கின்றன. அவை ஒவ்வொரு தொடரும் இரு வேறு வகைப்பட்ட பொருளைத் தருகின்றன. இவை எழுத்தோரன்ன பொருள்தெரி புணர்ச்சி.

குன்றேறுமா என்ற தொடர் இரு பொருளுக்கும் உரியதாயினும் அது ஒரு பொருளைக் குறிப்பான் உணர்த்த வேண்டும். எனவே அத்தொடர் முன்னப் பொருள (குறிப்புப் பொருள) தாயிற்று.

இத்தொடரை ஒலிக்குங்கால் ஒலிப்போனது ஓசை வேறுபாட்டான்-முன்னத்தான் — பொருள் உணரமுடியும், ஆனால் இத்தொடர் எழுதப்பட்ட வரிவடிவாக உள்ளபோது பொருள் உணரவியலாது.

61. உயிர்மயங்கியல் முதலிய மூன்றியல்களும் இருக்கப் புணரியல் என ஒன்று கூறப்பட்ட காரணத்தை விளக்குக. (1953)

உயிர்மயங்கியலில் உயிரீற்றுச் சொற்கள் புணரும் இலக்கணமும், புள்ளிமயங்கியலில் மெய்யீற்றுச் சொற்கள் புணரும் இலக்கணமும், குற்றியலுகரப் புணரியலில் குற்றுகர ஈற்றுச் சொற்கள் புணரும் இலக்கணமும் கூறப்படுகின்றன. இவைகள் சிறப்பிலக்கணம் எனப்படும். மற்றும் இவை செய்கை இலக்கணம் எனவும் கூறப்படும்.

புணரியலில் அவ்வாறு மூவகையீறுகளை எடுத்துக் கொண்டு இலக்கணம் கூறப்படவில்லை. செய்கை ஓத்துக்களுக்கு வேண்டிய கருவி இலக்கணம் மட்டுமே கூறப்பட்டுள்ளது. இதில் கூறப்பட்ட இலக்கணம் பொதுவிலக்கணம் எனப்படும்; மற்றும் கருவி இலக்கணம் எனவும் கூறப்படும்.

புணரியலில், "மொழியீறும் மொழிமுதலுமே புணர்வன எனவும். நிறுத்தசொல்லும் குறித்து வருகிளவியும் புணர்நிலைச்சுட்டு எனவும், மெய்பிரிதாதல் மிகுதல் குன்றல் இயல்பு என்பன மொழிபுணரியல்பு எனவும், புணர்ச்சி அல்வழி வேற்றுமை என இருவகைப்படும் எனவும், புணர்ச்சிக்கண் சாரியை வரும் எனவும், அவை இன்ன எனவும், மற்றும் பலவும் கூறப்படுகின்றன. இவ்விலக்கணங்கள் மூன்றீற்றுக்கும் பொதுவாகலின் உயிர்மயங்கியல் போன்ற ஒருவியலுள் அடக்கலாகாமையானும், இவை புணர்ச்சிபற்றிய வாகலின் மொழிமரபு போன்றவியல்களுள் அடங்காமையானும், பலவாகிக் கிடத்தலானும் புணரியல் என வேறோர் இயலைத் தொல்காப்பியர் வகுத்தார்.

62. தொகைமரபு என்ற இயலுள் கூறப்படுவது என்ன? அது மற்ற இயல்களோடு எத்தகைய தொடர்புடையது? (1958)

உயிர்மயங்கியலில் 12 உயிரீறும், புள்ளிமயங்கியலில் 11 மெய்யீறும், குற்றுகரப் புணரியலில் 1 குற்றுகர ஈறும்

விதந்து தனித்தனியாக வைத்து இலக்கணம் செய்யப் பட்டன. இந்த 24 ஈறுகளும் தொகை தொகையாக வைத்துத் தொகைமரபில் இலக்கணம் செய்யப்பட்டன. ஒரேவித இலக்கணம் பெறும் 24 ஈறுகளையும் தனித்தனி யாக வைத்துச் சூத்தரம் செய்யின் 24 ஆகும்; அவற்றை அல்வழி வேற்றுமைகளுக்கும் தனித்தனியாக்கின் 48 சூத்தரங்களாகப் பல்குமன்றே! இவ்வாறு 48 ஆகப் பல்குவனவற்றை ஒரே நூற்பாவில் தொகுத்து இலக்கணம் செய்யப்பட்டிருப்பதே தொகைமரபாகும். இத் தொகுப்பு இரண்டு முதல் 48 வரை அடங்கிய தொகுப்பாகும்.

புணரியலில் கருவிகளைக் கூறினர் தொல்காப்பியர்; பின் தொகைமரபில் செய்கை கூறத்தொடங்கி அவற்றுள் தொக்குப் புணரும் செய்கை கூறினர். இதனல் புணரிய லுடன் தொகை மரபு தொடர்புடையதாயிற்று.

மற்றும், தொகைமரபில் செய்கை இலக்கணத்துள் தொக்குப் புணரும் புணர்ச்சிகூறி உயிர்மயங்கியல் முதலிய வற்றில் ஈறு தொறும் விதந்து புணரும் புணர்ச்சி கூறி யுள்ளார். இதனல் தொகைமரபு பின்வரும் உயிர்மயங் கியல் முதலியவற்றுடன் தொடர்புடையதாயிற்று.

63. தொகைமரபில் கூறப்படும் இலக்கணங் களைத் தொகுத்து எழுதுக. (1961)

## தொகைமரபில் கூறப்படும் இலக்கணம்

(1) கசதப என்னும் வன்கணம் வரும்வழி அவற்றுக்கு முன் ஙஞநம என்ற மெல்லொற்றுத் தோன்றும். (2) ஞநம என்னும் மென்கணமும், யவ என்னும் இடைக்கணமும், உயிர்க்கணமும் வரும்வழி இயல்பாகும். (3) ண ன என்னும் புள்ளியிற்றுமுன் வரும் வினையின் முதல் எழுத்து யாகார மாயின் அது ஞாகார மாக ஒத்துவரும். (மண் யாத்த; மண் ஞாத்த.) (4) லன என் புள்ளிமுன் வரும் தநக்கள் றனக்கள் ஆகும். (கல் + தீது = கஃறீது.) (5) ண ள என் புள்ளி முன்வரும் தநக்கள் டணக்கள்

ஆகும். (மண் + தீது = மண்டீது.) (6) முன்னிலைக் கிளவிகள் இயல்பாயும் உறழ்பாயும் வரும். (7) முன்னிலைக் கிளவிக்கு ஔ ஞநமவ குற்றுகரம் என்ற ஈறுகள் வாரா. (8) உயர்திணைப்பெயர் இயல்பாய் முடியும்; இகர இறு பெயர்களில் சில திரிந்து முடியும். (9) அஃறிணை விரவுப் பெயர் இயல்பாய் முடியும். (10) மூன்றும் வேற்றுமைப் பொருளில் தம்மின்ஞகிய தொழிற்சொல் முன்வரின் இயல் பாதல் உறழத்தோன்றல் ஆகிய இரண்டிலக்கணம் பெறும். (11) ஐகார வேற்றுமைத்திரிபு மெல்லெழுத்துக்கு வல்லெழுத்துப் பெறுதல் முதலியனவாகப் பல்வகைப்படும். (12) இகர ஐகார ஈற்றில் ஏழாம் வேற்றுமை உருபு வல்லெழுத்து மிகுநவும் உறழாகுநவுமாய் வரும். (13) நெடிதயன் முன்னர் ஒற்றுக்கெடும்; குறியதன் முன்னர் ஒற்று இரட்டும். (14) அளவு நிறை எண்ணுப் பெயர்க்கு ஏ என் சாரியை வரும். (15) அளவுக்கும் நிறைக்கும் கசதப, நமவ, அ உ என்பன மொழிமுதலாகும் எழுத் துக்கள். (16) யாவர் என்னும் பெயரிடை வகரம் கெடும் (யாவர் > யார்); யாது என்னும் வினாவின் இடையில் வகரம் வரும் (யாது > யாவது).

64. முன்னிலை மொழி என்றால் என்ன? முன்னிலை மொழிக்கு முற்றத் தோன்றுதன யாவை?

முன்னிலை மொழி என்பது முன்னிலை வினைச்சொல்லைக் குறிக்கும். (அதாவது முன்னிலை ஏவல் ஒருமை வினை முற்றுச் சொல்லாகும்.) இம்முன்னிலை மொழிக்கு ஔ என வரூஉம் உயிரிறு சொல்லும், ஞ ந ம வ என்னும் புள்ளி யிறுதியும், குற்றியலுகரத்திறுதியும் ஆகிய ஈறுகள் வர மாட்டா—இவ்வாறு விலக்கப்பட்ட ஈறுகள் உகரம் பெற்று முன்னிலை மொழிக்கண் வரும்.

65. ஐகார வேற்றுமைத்திரிபு என எவற்றை மொழிப.

மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்,
வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலும்,

இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்,
உயிர்மிக வருவழி உயிர்கெட வருதலும்,
சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்,
சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்,
சாரியை இயற்கை உறழத் தோன்றலும்,
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்,
அஃறிணை விரவுப்பெயர்க் கவ்வியல் நிலையலும்,
மெய்பிறி தாகிடத் தியற்கை யாதலும்,

அன்னபிறவும் என்றதனல் வல்லெழுத்து மிகுவழி இயற்கை யாதலும், ஒழியாது என்றதனல் உயர்திணைக்கண் ஓரோ வழி வேற்றுமை உருபு ஒழிந்து வருதலும் ஆகிய பன்னிரண்டும் ஐகாரவேற்றுமைத்திரிபு என்று கூறப்படும்.

66. தொடியரை, காவின்குறை—இவற்றுக்குப் பொருள் என்ன? (1959); புணர்ச்சிவிதி தருக.

## தொடியரை

தொடியரை என்பதற்கு ஒரு தொடியும் அரைத்தொடியும் என்பது பொருள். (அதாவது ஒன்றரைத்தொடி = 1½ பலம்.) "அரை என வரூஉம் பால்வரை கிளவிக்குப் புரைவதன்ருல் சாரியை யியற்கை" என்ற விதிப்படி அரை என்னும் சொல் ஏ என்னும் சாரியை பெருமல் முடிந்தது. தொடி + அரை = தொடியரை.

## காவின்குறை

காவின்குறை என்பதற்கு ஒரு காவும் அதற்குக் குறைந்த சிறிதும் என்பது பொருள். கா என்பது நிறுத்தல் அளவு. குறை என்பது தற்கால வழக்கில் சொச்சம் என வழங்கும் பொருளுள்ளது. ''பனையென் அளவும் காவென் நிறையும் நினையுங்காலை இன்னொடு சிவணும்'' என்ற விதிப்படி இன் சாரியை பெற்று முடிந்தது. கா + இன் + குறை = காவின்குறை.

67. சாட்கோல், தமக்கு, எமது — புணர்ச்சி விதி தருக.

### சாட்கோல்

சாணுகிய கோல் எனப் பொருள்பட்டு அல்வழிப் புணர்ச்சியாகின்றது. சாண் என்னும் ணகர ஈறு, "மொழி முதலாகும் எல்லா எழுத்தும், வருவழி நின்ற ஆயிரு புள்ளியும், வேற்றுமை யல்வழி திரிபிடனிலவே" என்ற விதிப்படி இயல்பாய் முடிய வேண்டும். ஆனால், இந்நூற்பாவில் வருமொழி முற்கூறியவதனால் ணகரத்துக்குச் சிறுபான்மை திரிபு கொள்ளப்படும். அதனால் சாண் + கோல் என்பது சாட்கோல் எனத் திரிந்து முடிந்தது.

### தமக்கு

தாம் என்பது, "தாம் நாம் என்னும் மகர இறுதியும் ............ நெடுமுதல் குறுகும்" என்ற விதிப்படி தம் என்று நெடுமுதல் குறுகிற்று. "ஆறன் உருபினும் நான்கன் உருபினும், கூறிய குற்றொற்றிரட்டல் இல்லை, ஈறுகு புள்ளி அகரமொடு நிலையும், நெடுமுதல் குறுகும் மொழிமுன்னன" என்ற விதிப்படி தம் என்பது ஓர் அகரம் பெற்றுத் தம என்றாயிற்று. "வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும்" என்ற விதிப்படி கு என்னும் வேற்றுமை உருபின் முன் வல்லெழுத்து மிக்குத் தமக்கு என முடிந்தது.

தாம் + கு
தம் + கு
தம் + அ + கு
தம + கு
தம + க் + கு = தமக்கு.

### எமது

யாம் என்பது, "தாம் நாம் என்னும் மகர இறுதியும், யாமென்னிறுதியும் அதனோரன்ன, ஆ எ ஆகும் யாமென் னிறுதி, ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும், ஏனை

இரண்டும் நெடுமுதல் குறுகும்" என்ற விதிப்படி எம் என்று ஆயிற்று. "ஆறன் உருபினும் நான்கன் உருபினும் கூறிய குற்றொற் றிரட்டலில்லை, ஈருகுபுள்ளி அகரமொடு நிலையும்" என்ற விதிப்படி எம் என்பது ஓர் அகரம் பெற்று எம என்று ஆயிற்று. "ஆறன் உருபின் அகரக் கிளவி, ஈருகு அகரமுனைக் கெடுதல் வேண்டும்" என்ற விதிப்படி அது என்பதன் அகரம் கெட்டு எமது என முடிந்தது.

யாம் + அது
(ய்)ஆம் + அது
ஆம் + அது
எம் + அது
எம் + அ + அது
எம் + அ + து = எமது.

68. கோறீது கோனன்று, மண்ணகல் பொன்னகல் — இவைகளுள் நிலைமொழியும் வருமொழியும் வேறுவேறு பிரித்து நிறுத்தி உரிய விதி கூறிப் புணர்த்துக. (1958)

கோல் + தீது = கோறீது
கோல் + நன்று = கோனன்று

"லன என வரூஉம் புள்ளி முன்னர்த் தந எனவரின் றனவாகும்மே" என்ற விதிப்படி தீது என்பதன் தகரம் றகரமாகவும், நன்று என்பதன் நகரம் னகரமாகவும் திரிந்தன. "நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்" என்ற விதிப்படி கோல் என்பதன் லகரம் கெட்டுக் கோறீது, கோனன்று என முடிந்தன.

மண் + அகல் = மண்ணகல்
பொன் + அகல் = பொன்னகல்

"குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டலும்" என்ற விதிப்படி மண் பொன் என்பன ஒற்றிரட்டி மண்ண், பொன்ன் என்றாயின. "புள்ளியீற்று முன் உயிர் தனித்தியலாது மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுத்தே" என்ற விதிப்படி வருமொழி முதல் அகர உயிர் இரட்டித்த மெய்மீது ஏறி மண்ணகல், பொன்னகல் என முடிந்தன.

**69.** அளவிற்கும் நிறைக்கும் மொழி முதலாகும் ஒன்பது எழுத்துக்கள் யாவை? உதாரணமும் தருக.

கசதப, நமவ என்ற 7 மெய்யும், அஉ என்ற 2 உயிரும் ஆக 9 எழுத்துக்களும் அளவுக்கும் நிறைக்கும் மொழி முதலாகும்.

(எ-டு)

| அளவு | | நிறை |
|---|---|---|
| கலம் | ......... | கழஞ்சு |
| சாடி | ......... | சீரகம் |
| தூதை | ......... | தொடி |
| பானை | ......... | பலம் |
| நாழி | ......... | நிறை |
| மண்டை | ......... | மா |
| வட்டில் | ......... | வரை |
| அகல் | ......... | அந்தை |
| உழக்கு | ......... | ——— |

**70.** யாவர் யாது என்னும் சொற்கள் எவ்வெவ்வாறு வரும்? யாவர் என்பது பற்றிய தடைவிடைகளையும் வரைக. (1953, 1957.)

பலர்பாலை உணர்த்தும் சொல் முன் வரும் யாவர் என்னும் பெயரின் வகரம் கெடுதல் உண்டு; ஒன்றன்பாலை உணர்த்தும் சொல்முன் வரும் யாது என்னும் வினாவிடை வகரம் வருதல் உண்டு. இவை இரண்டும் மரூஉக்கள்.

(எ-டு) அவர் யாவர் — அவர் யார்
அது யாது — அது யாவது

யாவர் என்னும் பெயர் வகரம் கெட்டு யார் என நின்ற வழி, "யாஅர் என்னும் வினாவின் கிளவி" க்கும் இதற்கும் வேறுபாடென்னை என்ற தடை எழும். ஈண்டு வகரம் கெட்டு நின்ற யார் என்னும் சொல் பெயர்ச்சொல்; "யாஅர்" எனச் சொல்லதிகாரம் குறித்த சொல் வினாவின் கண்வரும் வினைக்குறிப்பு முற்றுச்சொல் — என்பது விடை.

மற்றும் வகரம் கெட்டு நின்ற யார் என்பது அவர் யாவர்—அவர் யார் எனப் பலர்பாலில் மட்டும் வரும்; யார் என்ற வினுவினைக்குறிப்பு முற்று, அவன் யார்? அவள் யார்? அவர் யார்? என மூன்று பாலிலும் வரும் — என்பதும் விடை யாகும்.

"யார் யார் கண்டே உவப்பார்" என வரும் இலக்கியத்தில் உள்ள யார் என்பது எதில் அடங்கும்? என்பது மற்ளூர் தடை. அத்தொடர்க்கு யாரை யாரைக் கண்டு என்று பொருள் கொள்ளப்படுதலின் அதுவும் இரண்டன் உருபு தொக்க–வகரம் கெட்டு வந்த–யார் என்னும் பெயருள் அடங்கும் என்பது விடை.

"அவர் யாவர்–அவர் யார்" என இளம்பூரணரும், நச்சரும் காட்டிய எடுத்துக்காட்டுக்களை விட, "நேற்று வந்தவர் யாவரோ அவரின்று போனுர்–நேற்று வந்தவர் யாரோ அவரின்று போனுர்" என்ற எடுத்துக்காட்டுச் சிறக்கும் என்பது ஆய்வாளர்களின் துணிபு.

### 71. மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே –எவை? எவ்வாறு?

விடை 70–ல் காண்க.

### 72. நெடுமுதல் குறுகும் சொற்கள் யாவை? நூற்பாச் சான்று தருக.

யான், யாம், நாம், நீ, தான், தாம், மூன்று, ஆறு என்பன நெடுமுதல் குறுகும் சொற்களாகும்.

<u>நூற்பாச் சான்று</u>

1. நீ என் ஒரு பெயர் நெடுமுதல் குறுகும்
   ஆவயின் னகரம் ஒற்ரு கும்மே.
2. தாம் நாம் என்னும் மகர இறுதியும்
   யாமென் இறுதியும் அதனே ரன்ன
   ஆஎ ஆகும் யாமென் இறுதி

ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகும்.

3. தான் யான் என்னும் ஆயி ரிறுதியும்
மேன்முப் பெயரொடும் வேறுபாடிலவே.

4. மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்.

73. "உயர்திணையாயின் நம்மிடை வருமே" இவ்விதி பெறும் நிலைமொழி யாது? அது வேறு விதி பெறுதலும் உண்டோ? எப்படி? (1959)

உயர்திணையாயின் நம்மிடை வருமே என்ற விதிபெறும் நிலைமொழி, எல்லாம் என்னும் விரவுப் பெயராகும்.

எல்லாம் என்னும் சொல் உயர்திணைப் பொருளையும், அஃறிணைப் பொருளையும் தருவதோர் விரவுப் பெயர். இது அஃறிணைப் பொருளைத் தந்து வேற்றுமை உருபு ஏற்குங் கால் வற்றுச் சாரியையும் ஈற்றில் உம்மையும் பெற்றுமுடியும்.

"எல்லாம் என்னும் இறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதி யான" – என்ற விதிப்படி வற்றும் உம்மும் பெற்று எல்லாம் என்பதன் மகரம்" அத்தே வற்றே ஆயிரு மொழிமேல் ஒற்றுமெய் கெடுதல்" என்ற விதிப்படி கெட்டு முடிந்தது. (எல்லாம் > எல்லா + வற்று + ஐ + உம் = எல்லாவற்றையும்.)

எல்லாம் என்பது உயர்திணைப் பொருளைத் தந்து வேற்றுமை உருபு ஏற்குங்கால் நம்முச்சாரியை இடைவரும்; உம் இறுதியில் வரும். (எல்லாம் + நம் + ஐ + உம் = எல்லா நம்மையும்.)

74. தொல்காப்பியனார் காலத்தில் ஏழ்என்னும் எண்ணுப்பெயர் மெய்யீருகவே வழங்கிற்று — நூலினின்றும் ஆதாரம் காட்டி நிறுவுக. (1961)

உருபியலில் உயிரீறுகள் சொல்லி முடித்துப் பின் மெய் யீறு சொல்லுங்கால், "அன்னென் சாரியை ஏழன் இறுதி

முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப" என ஏழ் என்பதற்கு நூற்பா கூறி அதன்பின் குற்றுகர ஈறு கூறினர். இதனால் இது முற்றுகரமாகிய உயிரீறன்று என்பதும் மெய்யீறே என்பதும் புலனாகின்றது.

உயிர்மயங்கியலில் உகர ஈற்றில் இச்சொல்லை விதந்து ஆசிரியர் இலக்கணம் கூறவில்லை. ஆகவே உயிரீறன்று என்பது விளங்கும்

புள்ளிமயங்கியலில் மெல்லொற்றீற்று இலக்கணம் கூறி முடித்து, இடையொற்றீறுகளில் ய்ர்ல்வ் ஈறுகள் கூறி ழகர வீறு கூறுங்கால் தாழ், தமிழ், குமிழ், பாழ் என்னும் சொற்களுக்குச் சிறப்பிலக்கணம் கூறி அதன்பின் ஏழ் என்னும் சொல்லை எடுத்து ஏழ் நூற்பாக்களில் விதந்து இலக்கணம் கூறி அதன் பின் கீழ் என்னும் மற்றோர் ழகர ஈற்றுக்குச் சிறப்பிலக்கணம் கூறிச் சென்றார். இவ்வாறு ஏழ் என்னும் சொல்லைப் புள்ளிமயங்கியலில் வைத்தமையானும், அதிலும் இடையொற்றில் வைத்துக் கூறலானும், அதிலும் தாழ் தமிழ் குமிழ் பாழ் என்னும் சொற்களுக்கும் கீழ் என்னும் சொல்லுக்கும் இடையே வைத்துக் கூறலானும் ஏழ் என்பது மெய்யீறே என்பது தெற்றெனப் புலப்படும்.

குற்றியலுகரப் புணரியலில் எண்ணுப் பெயர்களுக்கு இலக்கணம் கூறிவருங்கால் ஒன்று முதலிய எண்களுக்கு இலக்கணம் கூறி அதில் ஏழ் என்னும் பெயரைக்கூறாது விடுந்தனர். ஏழ் என்பதை உகர ஈறாகத் தொல்காப்பியர் கருதி இருந்தால் குற்றுகரத்தொடு முற்றுகரத்தையும் இனம்பற்றி உடன் கூறியிருப்பாரன்றே. அவ்வாறு கூறாமையின் ஏழ் என்பது தொல்காப்பியர் காலத்தில் மெய்யீறாகவே வழங்கியது என்பது விளங்கும்.

75. ஏழென்னும் எண்ணுப்பெயர் தொல்காப்பியர் காலத்தில் உயிரீறாக வழங்கிற்றா? மெய்யீறாக வழங்கிற்றா? சான்று காட்டி நிறுவுக. (1959)

விடை 74-ல் காண்க.

76. "குற்றியலுரகக் கின்னே சாரியை"— "குற்றியலுகரத்திறுதி முன்னர் முற்றத்தோன்றும் இன்னென் சாரியை" — என ஒரு விதியை இரண்டிடங்களில் கூறியது ஏன்? ஆராய்க. (1959)

"குற்றியலுகரக் கின்னே சாரியை" என்ற நூற்பா தொகை மரபில் வந்துள்ளது. அளவு நிறைப்பெயர்களுக்குமுன் குறை என்னும் சொல் வருமாயின் இன் சாரியை வரும் என்பது இந்நூற்பாவின் கருத்து.

(உ-ம்) உழக்கு + இன் + குறை = உழக்கின்குறை (அளவு)
கழஞ்சு + இன் + குறை = கழஞ்சின்குறை (நிறை)

"குற்றிய லுகரத் திறுதி முன்னர், முற்றத் தோன்றும் இன்னென் சாரியை" என்ற நூற்பா உருபியலில் வந்துள்ளது. பொருட்பெயர்களுக்குமுன் வேற்றுமை உருபு வருமாயின் இன்சாரியை வரும் என்பது இந் நூற்பாவின் கருத்து.

(உ-ம்) வரகு + இன் + ஐ = வரகினை

மேற்கண்ட இரண்டு நூற்பாக்களிலும் 'குற்றுகர இறுதி இன்சாரியை பெறும்' என்ற ஒரே விதி கூறப் படினும் வேறுபாடுகள் உள. முதல் நூற்பாவில் நிறுத்த சொல் அளவு நிறைப் பெயர்களாகவும், இரண்டாம் நூற்பாவில் நிறுத்தசொல் பொருட்பெயராகவும் வேறுபட்டுள்ளன. மேலும், முதல் நூற்பாவில் குறித்துவருகிளவி குறை என்னும் சொல்லாகவும், இரண்டாம் நூற்பாவில் குறித்து வருகிளவி வேற்றுமை உருபாகவும் வேறுபட்டுள்ளன. இரண்டு நூற்பாக்களிலும் கூறப்பட்ட முடிபு ஒன்றுயினும் நோக்கம் வேறுவேருகலின் கூறியது கூறல் என்னும் குற்றமாகாது.

இவ்வாறு இலக்கணம் கூறுவது தொல்காப்பியரின் வழக்கம் என்பதை, "வேற்றுமைக்கண்ணும் அதனோரற்றே", "தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெயரியல்",

"நாலிரண்டாகும் பாலுமாருண்டே" என்பன போன்ற நூற்பாக்களைப் பன்முறை கூறியதனுன் உணரலாகும்.

77. "குற்றிய லுகரக்கின்னே சாரியை" — "குற்றியலுகரத்திறுதி முன்னர் முற்றத் தோன்றும் இன்னென் சாரியை" — இங்ஙனம் இருமுறை கூறியது ஏன்? ஆராய்க. (1960)

விடை 76-ல் காண்க.

78. அதனை, அதைமற்றம்ம; ஆடிக்குக் கொண்டான், ஆடிக்கு முப்பதுநாள்; – இவற்றைப் பிரித்து விதி கூறி முடித்துக் காட்டுக. (1953)

1. அது + அன் + ஐ = அதனை

"சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி ஒட்டிய மெய் யொழித்து உகரம் கெடுமே" என்ற விதிப்படி அது என்னும் சொல் வேற்றுமை உருபு ஏற்குங்கால் அன் சாரியை பெற்றுப் பிறகு அது என்பதன் உகரம் கெட்டு, நின்ற தகர ஒற்றில் அன் சாரியையின் அகரம் ஏறவும், னகரத்தில் ஐ உருபு ஏறவும் அதனை என முடிந்தது. (அது + ஐ > அது + அன் + ஐ > அத் + அன் + ஐ = அதனை.)

2. அது + ஐ + மற்று + அம்ம = அதைமற்றம்ம

"அன்று வரு காலை ஆவாகுதலும், ஐவரு காலை மெய் வரைந்து கெடுதலும், செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப" என்ற விதிப்படி அது என்னும் சொல் முன் ஐ என்னும் சாரியை வந்து உகரம் கெட்டு நின்ற மெய் மீது ஐகாரச் சாரியை ஏறி அதைமற்றம்ம என்று முடிந்தது. (அது + ஐ > அத் + ஐ = அதை)

3. ஆடி + இக்கு + கொண்டான் = ஆடிக்குக் கொண்டான்

"திங்கள் முன்வரின் இக்கே சாரியை" என்ற விதிப்படி ஆடி என்னும் திங்கட் பெயர்முன் இக்குச்சாரியை வந்தது. "இக்கின் இகரம் இகரமுனையற்றே" என்ற விதியின் மாட்டேறு, "அத்தின் அகரம் அகரமுனை யில்லை" என்ற விதியைத் தழுவி நின்றபடி இக்குச் சாரியையின் இகரம் கெட்டது. "அற்றே" என்ற மாட்டேற்ருன் அக்குச் சாரியை பெறும் வல்லொற்று இக்குச் சாரியைக்கும் உரித் தாகி ஆடிக்குக் கொண்டான் என முடிந்தது. (ஆடி + இக்கு + கொண்டான் > ஆடி + க்கு + க் + கொண்டான் = ஆடிக்குக்கொண்டான் )

4. ஆடி + கு + முப்பதுநாள் = ஆடிக்குமுப்பதுநாள்

ஆடி என்னும் சொல் முன் கு என்னும் நான்காம் வேற்றுமை உருபு வந்தது. "வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு, ஒல்வழி ஒற்றிடைமிகுதல் வேண்டும்" என்ற விதிப்படி குவ்வுருபு வல்லொற்று மிக்கு முடிந்தது. (ஆடி + கு > ஆடி + க் + கு = ஆடிக்கு)

79. ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகும் — எவை ?

அகர ஈருக வருகின்ற வினைஎஞ்சு கிளவியும், உவமக் கிளவியும், எனஎன் எச்சமும், சுட்டின் இறுதியும், ஆங்க என்னும் உரையசைக் கிளவியும் ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுவனவாம். (எ–டு) (1) உண்ணச் சென்ருன் — வினைஎஞ்சு கிளவி. (2) புலி போலப் பாய்ந்தான் — உவமக்கிளவி. (3) கொள்ளெனக் கொண்டான்—என என் எச்சம். (4) அக் கொற்றன் — சுட்டின் இறுதி. (5) ஆங்கக் கொண்டான் — உரையசைக்கிளவி.

80. சுட்டெழுத்தின் முன் நாற்கணமும் எங்ஙனம் புணரும்? விதி கூறி விளக்குக

(1) அகரச்சுட்டின் முன் வன்கணம் வருமாயின் "வினைஎச்சு கிளவியின்" என்ற நூற்பாவில் 'சுட்டின் இறுதியும் ......... வல்லெழுத்து மிகும்' என்ற விதிப்படி வல்லெழுத்து மிகும். இகரச்சுட்டு என்னும் "வேற்றுமை யல்வழி இ ஐ என்னும்" என்ற விதிப்படி வல்லெழுத்து மிகும். உகரச்சுட்டு முன்னும், "சுட்டின்முன்னரும் அத் தொழிற்றாகும்" என்ற விதிப்படி வல்லெழுத்து மிகும்.

(எ–டு) அ + கொற்றன் = அக்கொற்றன்
இ + கொற்றன் = இக்கொற்றன்
உ + கொற்றன் = உக்கொற்றன்

(2) அகரச்சுட்டின்முன் மெல்கணம் வருமாயின், "சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின், ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும்" என்ற விதிப்படி வந்தமெல்லொற்று மிகும். இகரச்சுட்டு முன்னும் "சுட்டின் இயற்கை முற்கிளந் தற்றே" என்ற விதிப்படி வந்தமெல்லொற்று மிகும். உகரச்சுட்டு முன்னும், "ஏனவைவரினே மேனிலை இயல்பே" என்ற விதிப்படி வந்தமெல்லொற்று மிகும்.

(எ–டு) அ + ஞாலம் = அஞ்ஞாலம்
இ + ஞாலம் = இஞ்ஞாலம்
உ + ஞாலம் = உஞ்ஞாலம்

(3) அகரச்சுட்டின்முன் இடைக்கணம் வருமாயின், "யவமுன் வரினே வகரம் ஒற்றும்" என்ற விதிப்படி வகர ஒற்றுமிகும். இகரச்சுட்டு உகரச்சுட்டுக்களின் முன்னும், "சுட்டின் இயற்கை", "ஏனவை வரினே" என்ற விதி களின்படி வகரஒற்று மிகும்.

(எ–டு) அ + யாழ் = அவ்யாழ்
இ + யாழ் = இவ்யாழ்
உ + யாழ் = உவ்யாழ்

(4) அகரச்சுட்டின் முன் <u>உயிர்க்கணம்</u> வருமாயின், "உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது" என்ற விதிப்படி வகர ஒற்றுமிகும். இகர உகரச்சுட்டுகளின் முன்னும், "சுட்டின் இயற்கை" "ஏனவை வரினே" என்ற விதி களின்படி வகர ஒற்று மிகும். இனிச் செய்யுட்கண், "நீடவருதல் செய்யுளில் உரித்தே", "சுட்டின் இயற்கை", "ஏனவை வரினே" என்ற விதிகளின்படி சுட்டெழுத்துக் கள் நீண்டுமுடிதலும் உண்டு.

(எ-டு) அ + ஆடை = அவ்வாடை
இ + ஆடை = இவ்வாடை
உ + ஆடை = உவ்வாடை
அ + இரு = ஆயிரு
இ + வயின் = ஈவயின்
உ + வயின் = ஊவயின்
} செய்யுட்கண் வந்த முடிபு.

81. சுட்டின் முன்னர் மெல்லினமும் இடை யினமும் வருங்கால் அவை எவ்வாறு புணரும்? விதிகூறி முடித்துக் காட்டுக. *(1958)*

விடை 80-ல் காண்க.

82. சுட்டின்முன் நாற்கணமும் புணர்வது குறித்து வந்த நூற்பாக்களைத் திரட்டி எழுதுக.

## சுட்டின்முன் வன்கணம்

1. வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
எனவென் எச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே.

2. வேற்றுமை யல்வழி இஐ யென்னும்
ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைய;
அவைதாம்

இயல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவும்
உறழா குநவும் என்மனுர் புலவர்.

3. சுட்டின் முன்னரும் அத்தொழிற் ருகும்.

## சுட்டின்முன் மென்கணம் முதலியன

1. சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்
ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும்.
2. யவமுன் வரினே வகரம் ஒற்றும்.
3. உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது.
4 நீட வருதல் செய்யுளுள் உரித்தே.
5. சுட்டின் இயற்கை முற்கிளந் தற்றே.
6. ஏனவை வரினே மேனிலை யியல்பே.

83. ஆயிடைத்தமிழ், ஆயிருதிணை இவ்விரண்டிடத்தும் சுட்டு நீண்டமைக்கு இலக்கணம் என்னை? (1960)

## அ + இரு + திணை = ஆயிருதிணை

"நீட வருதல் செய்யுளுள் உரித்தே" என்ற விதிப்படி அகரச் சுட்டு நீண்டு வந்தது. ஆயிருதிணை என்ற தொடர், "ஆயிருதிணையின் இசைக்குமன சொல்லே" என நூற்பாச் செய்யுட்கண் வந்தது.

## அவ் + இடை + தமிழ் = ஆயிடைத்தமிழ்

அவ் என்னும் பன்மைச்சுட்டு வடவேங்கடம் தென்குமரி என்னும் இரண்டிடங்களைச் சுட்டி நின்றது. "கிளந்தவல்ல செய்யுளுள் திரிநவும்" என்ற அதிகாரப் புறனடையால் வகர ஈறு யகர வீருகத் திரிந்தது. (இவ்விடத்துச் சுட்டு நீண்டமைக்கு 'நீடவருதல் செய்யுளுள் உரித்தே' என்பது விதியாகாதோ எனின், இடை என்னும் வருமொழி வேற்றுமை உருபாகலின் ஆகாது என்று நச்சர் குறிப்பிடுகின்ருர்.)

84. "அன்றியனைத்தும் இயல்பென மொழிப" — எவை?

## அகர ஈற்றில் இயல்பு

"அன்ன என்னும் உவமக் கிளவியும்
அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்
செய்ம்மன என்னும் தொழிலிறு சொல்லும்
ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்
செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்
செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்
அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்
பலவற் றிறுதிப் பெயர்கொடை உளப்பட
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப."

## ஆகார ஈற்றில் இயல்பு

"ஆவும் மாவும் விளிப்பெயர்க் கிளவியும்
யாவென் வினவும் பலவற் றிறுதியும்
ஏவல் குறித்த உரையசை மியாவும்
தன்தொழில் உரைக்கும் வினுவின் கிளிவியோடு
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப."

85. அகர ஆகார ஈற்றில் இயல்பாய் முடிவன யாவை?

விடை 84-ல் காண்க.

86. "வாழிய என்னும் சேயென் கிளவி", "தம்மின் ஞகிய தொழிற்சொல் முன்வரின்", "இகர இறுபெயர் திரிபிட னுடைத்தே"— பொருள் கூறுக. (1961)

(1) வாழிய என்னும் — வாழிய என்று சொல்லப்படுகின்ற; சேயென் கிளவி —(அவ்வாழுங்காலம் அண்மையவன்றிச்) சேய்மைய என்று உணர்த்தும் சொல். [வாழ்ந்து

வரும் ஒருவனை நோக்கி "நீ வாழிய" என்புழி அவ் வாழிய என்னும் சொல் "நீ நெடுங்காலம் வாழிய" என்னும் பொருளையே தருமாதலின் அதனைச் சேயென் கிளவி என்றார்.]

(2) தம்மின் ஆகிய — (மூன்றும் வேற்றுமைப் பொருளாகிய வினைமுதற் பொருள்கள்) தம்மான் உளவாகிய; தொழிற்சொல் — வினைச்சொற்கள் தாம்; முன் வரின் — அவற்று முன் வரின்; (மெய்ம்மை யாகலும் — இயற்கை யாதலும்; உறழத் தோன்றலும் — உறழ்ந்து முடிதலும்; அம்முறை இரண்டும் உரியவை உளவே — அம்முறைமையுடைய இரண்டு செய்கையும் உரியன உள்ளன.)

[கோட்பட்டான், சாரப்பட்டான், தீண்டப்பட்டான், பாயப்பட்டான் என்பன போன்ற சொற்கள் தம்மினாகிய தொழிற்சொற்கள். நாய்கோட்பட்டான் என்புழி நாய் என்பது நாயால் எனப் பொருள்பட்டு மூன்றும்வேற்றுமைப் பொருளாகிய வினைமுதற் பொருளாயிற்று; கோட்பட்டான் என்பது அவ்வினை முதற்பொருளால் உளவாகிய தொழிற் சொல்லாயிற்று.]

(3) இகர இறுபெயர் — (உயர்திணைப் பெயர்களுள்) இகர ஈற்றுப் பெயர்; திரிபிடன் உடைத்து — திரிந்து முடியும் இடனும் உடைத்து. [எட்டி + பூ = எட்டிப்பூ; நம்பி + பிள்ளை = நம்பிப்பிள்ளை. ஈண்டுத் திரிபு என்றது மிக்க திரிபினை.]

**87. இராஅக்காக்கை, இராக்காக்கை, இராகாக்கை — இம் மூன்றற்கும் உரிய பொருள் வேறுபாட்டை எழுதி நூற்பா விதியும் தருக.**

### இராஅக்காக்கை

இப்பெயரெச்சத் தொடர்க்கு இல்லாத காக்கை என்பது பொருள். "உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி, மெய்ம்மை யாக அகரம் மிகுமே" என்ற விதியின்கண்

உம்மை தொக்க என்றது எஞ்சிய என்ற வாய்பாட்டு வேற்றுமையான் பெயரேச்சமறைக்கும் அகரப்பேறு கொள்ளப் பட்டது. இதனுல் இரா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் அகரம் பெற்று, மெய்ம்மையாக என்ற இலே சான் வல்லெழுத்தும் பெற்று முடிந்தது. (இரா + காக்கை > இரா + அ + காக்கை > இரா + அ + க் + காக்கை = இராஅக் காக்கை.)

## இராக்காக்கை

இவ்வேற்றுமைத் தொகைக்கு இராவிடத்துக்காக்கை (இரவில் கரையும் சாமக்காக்கை) என்பது பொருள். "இராவென் கிளவிக்கு அகர மில்லை" என்ற விதியான் அகரம் பெருது பொதுவிதிப்படி வல்லொற்று மிக்கு முடிந்தது. ( இரா + காக்கை > இரா + க் + காக்கை = இராக்காக்கை.)

## இராகாக்கை

இவ் வினைமுற்றுத்தொடர்க்கு இருக்கமாட்டா காக்கை (காக்கை இரா) என்பது பொருள். இரா என்பது பலவின் பால் ஆகார வீற்று வினைமுற்று. "ஆவும் மாவும் விளிப் பெயர்க் கிளவியும், யாவென் வினவும் பலவற் றிறுதியும், ஏவல் குறித்த உரையசை மியாவும், தன்தொழில் உரைக்கும் வினவின் கிளவியோடு, அன்றி அனைத்தும் இயல்பென மொழிப" என்ற விதிப்படி பலவற்றிறுதி (பலவின்பால் வினைமுற்று) முன்னர் வல்லினம் மிகாதாயிற்று. ( இரா + காக்கை = இராகாக்கை.)

**88. ஏவல் குறித்த உரையசை மியா, தன் தொழில் உரைக்கும் வினவின் கிளவி என்பன யாவை? அவற்றிற்குக் கூறப்பெற்ற இலக்கணத்தை இலக்கியத்தில் காட்டுக. (1959)**

ஏவல்குறித்த உரையசைமியா என்பது முன்னிலையில் ஏவல் வினைச்சொல்லைக் குறித்து வருகின்ற உரையசை

யாகிய மியா என்னும் ஆகார வீற்று இடைச்சொல்லாகும். இதன்முன்வரும் வல்லினம் மிகாது.

தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவி என்பது தனது தொழிலை வினாப்பொருண்மையில்வைத்துச் சொல்லுகின்ற ஆகாரவீற்று வினாவினைச் சொல்லாகும். இதன்முன் வரும் வல்லினமும் மிகாது.

(இலக்கணம்)

" ஏவல் குறித்த உரையசை மியாவும்
தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவியோடு
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப."

(இலக்கியம்)

1. கேண்மியா கொற்றா.
2. உண்கா கொற்றா.

89. தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவி, தொடக்கம் குறுகும் பெயர்நிலைக் கிளவி — இவைகளை இன்னவென விளக்குக. (1955)

(1) தன்தொழில் உரைக்கும் வினாவின்கிளவி: விளக்கம் 88-ம் விடையுள் காண்க.

(2) தொடக்கம் குறுகும் பெயர் நிலைக் கிளவி: நெடுமுதல் குறுகி முடியும்படியான தான், தாம், யான், யாம், நாம் என்னும் ஐந்து சொற்கள் தொடக்கம் குறுகும் பெயர்நிலைக் கிளவியாம். தான்–தன் எனவும், தாம்–தம் எனவும், யான்–என் எனவும், யாம் – எம் எனவும், நாம் – நம் எனவும் தொடக்கமாகிய முதல் எழுத்துக் குறுகுதலின் இவ்வாறு பெயர் பெற்றன.

90. செய்யுட்கென விதிகூறப்பட்ட நூற்பாக்களைத் தொகுத்து எழுதி எவையேனும் இரண்டுக்கு உரையும் விளக்கமும் தருக.

## செய்யுட்களுக்கு விதி

1. நீட வருதல் செய்யுளுள் உரித்தே.
2. பலவற் றிறுதி நீடுமொழி உளவே
   செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான.
3. குறியதன் இறுதிச் சினைகெட உகரம்
   அறிய வருதல் செய்யுளுள் உரித்தே.
4. இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி
   நின்ற இகரம் உகரம் ஆதல்
   தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே.
5. அன்றுவரு காலை ஆவா குதலும்
   ஐவரு காலை மெய்வரைந் து கெடுதலும்
   செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப.
6. விண்ணென வரூஉம் காயப் பெயர்வயின்
   உண்மையும் உரித்தே அத்தென் சாரியை
   செய்யுள் மருங்கின் தொழில்வரு காலை.
7. இலமென் கிளவிக்குப் படுவரு காலை
   நிலையலும் உரித்தே செய்யு ளான
8. பொன்னென் கிளவி யீறுகெட முறையின்
   முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
   செய்யுள் மருங்கின் தொடரிய லான.

## உரை விளக்கம்

(1) இன்றி என்னும் வினைஎஞ்சு இறுதி நின்ற இகரம் — இன்றி என்னும் வினைஎச்சச்சொல்லின் இறுதியில்நின்ற இகரம்; உகரம் ஆதல் — உகரமாகத் திரிந்து முடிவது; தொன்றியல் மருங்கின் — பழைமையான பக்கத்தின்; செய்யுளுள் உரித்து — செய்யுட்களிடத்து உரித்து.

(எ-டு) "உப்பின்று புற்கை உண்கமா கொற்கை யோனே." (இன்றி என்பது இன்று எனத் திரிந்து செய்யுட்கண் வந்தது.)

(2) அன்றுவருகாலை — (அதிகாரத்தான் நின்ற சுட்டு முதல் உகர ஈற்றுப் பெயர்கள்) அன்று என்னும் சொல் வருமொழியாய் வருங்காலத்து; ஆவாகுதலும் - உகரம் ஆகாரமாகித் திரிந்து முடிதலும்; ஐவருகாலை - ஐகாரச் சாரியை இடைவந்து முடியுங்காலத்து; மெய் வரைந்து கெடுதலும் - உகரம் தான் ஏறிநின்ற மெய்யை நிறுத்தித் தான்மட்டும் கெடுதலும்; செய்யுள் மருங்கின் - செய்யு ளிடத்து; உரித்தென மொழிப - உளவென்று ஆசிரியர் கூறுவர்.

அது + அன்று + அம்ம
அதா + அன்று + அம்ம = அதாஅன்றம்ம.

அது + ஐ + மற்று + அம்ம
அத் + ஐ + மற்று + அம்ம = அதைமற்றம்ம.

91. புணர்ச்சிவிதி கூறுமிடத்துச் செய்யுளுக்கே உரிய சில விதிகளும் உடன் கூறப்பட்டுள்ளன என்பதற்கு இரண்டு எடுத்துக் காட்டுத் தருக. (1959)

விடை 90-ல் காண்க.

92. "தொல்காப்பியர் ஒரு சொல்லுக்கே பொருள்வேறுபாடு கருதி வெவ்வேறு விதி கூறுவார்" என்னும் கூற்றுக்கு இயைய அவர் எடுத்தாண்ட சொற்கள் யாவை? அவற்றின் பொருள் வேறுபாடு என்னை? எவையேனும் இரண்டு சொற்களுக்கு அவர்தந்த விதிகளையும் தருக.

தொல்காப்பியர் பொருள்வேறுபாடு கருதி
வெவ்வேறுவிதி கூறிய சொற்கள்

1. எல்லாம் (அஃறிணைப்பொருள், உயர்திணைப் [பொருள்)
2. யா (யாவென் வினா, யாமரக்கிளவி)

3. மா (மாமரம், விலங்குமா)
4. புளி (புளியமரம், சுவைப்புளி)
5. ஓடு (ஓடுமரம், ஓடுவென் உருபு)
6. சே (சேமரக்கிளவி, பெற்றம்)
7. பனை (பனையென்அளவு, பனைமரம்)
8. ஆண் (ஆண்பால் விரவுப்பெயர், ஆண்மரம்)
9. எகின் (புளியமரம், அன்னப்பறவை)
10. இல் (வீடு, இன்மைப் பொருள்)

## விளக்கம்

(1) ஆவும் மாவும் என்னும் நூற்பாவில், "யாவென் வினுவும் ........... அன்றி அனைத்தும் இயல்பென மொழிப" என்ற விதிப்படி யாவென்னும் வினுப்பெயர்முன் வல்லினம் மிகா என்பது விளங்குகிறது. (உ-ம்) யாபெரிய? யாசிறிய?

"யாமரக்கிளவியும் பிடாவும் தளாவும், ஆமுப்பெயரும் மெல்லெழுத்து மிகுமே" என்ற விதிப்படி யா என்னும் மரப்பெயர் மெல்லெழுத்து மிக்குமுடியும் என்பது விளங்குகிறது. (உ-ம்) யாஅங்கோடு; யாஅஞ்செதில்.

[யா என்னும் ஒரு சொல்லே வினுப்பொருளைத் தருங் காலத்தில் வல்லினம் மிகா என்ற ஒரு விதியும், மரப் பெயரைக் குறிக்குங் காலத்தில் மெல்லெழுத்து மிகும் என்ற மற்றொரு விதியும் தொல்காப்பியர் கூறினர்.]

(2) "எகின் மரமாயின் ஆண்மரஇயற்றே" என்ற விதிப்படி எகின் என்னும் மரத்தை உணர நின்றபெயர் ஆண் மரம் போல அம்முச்சாரியை பெறும் என்பது விளங்குகிறது. (உ-ம்) எகினங்கோடு, எகினம்பூ.

"ஏனை எகினே அகரம் வருமே, வல்லெழுத்து இயற்கை மிகுதல் வேண்டும்" என்ற விதிப்படி எகின் என்னும் பறவையை உணர நின்ற சொல் அகரப் பேற்றுடன் வல்லெழுத்தும் மிக்கு முடியும் என்பது விளங்குகிறது. (உ-ம்) எகினக்கால்; எகினத்தலை.

93. ஒரு சொல் வேறு வேறு பொருள் தருங்கால் வேறுவேறு புணர்ச்சி விதி பெறும் என்பதனை ஓரெடுத்துக்காட்டால் விளக்குக. (1960)

விடை 92-ல் காண்க.

94. புணர்ச்சி விதி தருக:— (1) சிஃறாழிசை (2) காஅக்குறை (1955) (3) வேணவா (1955)

**1. சில + தாழிசை = சிஃறாழிசை**

"வல்லெழுத் தியற்கை உறழத் தோன்றும்" என்ற விதிப்படி பல சில என்னும் சொற்கள் மிகுதலும் இயல்பாதலும் ஆகிய உறழ்ச்சியாக வரும். இன்னும் இவ்விதியில், தோன்றும்என்ற மிகையான் அகர ஈறுகெட்டு லகரம் ஆய்தமாகவும் பெறும். இதனுள் சில என்பது அகரம் கெட்டுச் சில் என்றாகி லகரம் ஆய்தமாய்த் திரிந்தது. இனி, "லன என வரூஉம் புள்ளி முன்னர்த் தநஎன வரின் றனவாகும்மே" என்ற விதிப்படி தாழிசை என்ற வருமொழித் தகரம் றகரமாய்த் திரிந்து சிஃறாழிசை என முடிந்தது. (சில + தாழிசை > சில் + தாழிசை > சில் + றாழிசை > சிஃ + றாழிசை = சிஃறாழிசை.)

**2. கா + குறை = காஅக்குறை**

"குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும், அறியத் தோன்றும் அகரக் கிளவி" என்ற விதிப்படி கா என்னும் ஓரெழுத்து மொழிமுன் அகரம் வந்தது. மற்றும் பொது விதியான் வல்லொற்று மிக்கு முடிந்தது. (கா + குறை > கா + அ + குறை > கா + அ + க் + குறை = காஅக்குறை)

**3. வேட்கை + அவா = வேணவா**

"செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயென் னிறுதி அவாமுன் வரினே

மெய்யொடுங் கெடுதல் என்மனார் புலவர்
டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும்" என்ற
விதிப்படி வேட்கை என்னும் ஐகார ஈற்றுச் சொல், அவா என்னும் சொல் வருமாயின் ஐகார இறுதியும் அது ஏறி நின்ற மெய்யும் கெட்டு வேட் என்றாகி, அதன்கண் டகாரம் ணகாரமாகத் திரிந்து வேண் என்றாகி, "புள்ளியீற்றுமுன் உயிர் தனித்தியலாது மெய்யொடுஞ் சிவணும் அவ்வியல் கெடுத்தே" என்ற விதிப்படி ணகார மெய்மீது அவாவென்னும் உயிர் முதல் ஏறி வேணவா என முடிந்தது.

வேட்கை + அவா
வேட் + அவா
வேண் + அவா = வேணவா

95. வேட்கை என்னும் சொல் செய்யுளில் எவ்வகை முடிவு பெறும்? விளக்குக. (1958)

விடை 94-ல் காண்க.

96. 1. பலாஅக்கோடு (1957) 2. நாடுரி 3. ஏஎக்கொட்டில் (1957) 4. பனாஅட்டு 5. விச்சாவாதி 6. கோயில் — மயக்க விதி தருக.

1. பலா + கோடு = பலாஅக்கோடு

"குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும், அறியத் தோன்றும் அகரக் கிளவி" என்ற விதிப்படி பலா என்னும் குறியதன் முன்வந்த ஆகார ஈறு அகரம் பெற்றுப் பொது விதிப்படி வல்லொற்றும் மிக்குப் பலாஅக்கோடு என முடிந்தது. (பலா + கோடு > பலா + அ + க் + கோடு = பலாஅக்கோடு)

2. நாழி + உரி = நாடுரி

"உரிவரு காலை நாழிக் கிளவி
இறுதி இகரம் மெய்யொடும் கெடுமே
டகரம் ஒற்றும் ஆவயி னான" என்ற விதிப்படி

நாழி என்ற சொல்லின் இறுதி இகரமும் அது ஏறிநின்ற ழகர ஒற்றும் கெட்டு நா என்ருகி, அதன்பின் டகர ஒற்று வர நாட் என்ருகி, "புள்ளியீற்றுமுன் உயிர்தனித்தியலாது மெய்யொடும் சிவணும் அவ்வியலில் கெடுத்தே" என்ற விதிப்படி டகர மெய்ம்மீது உரி என்னும் உயிர் முதல் ஏறி நாடுரி என முடிந்தது.

நாழி + உரி
நா + உரி
நாட் + உரி = நாடுரி

## 3. ஏ + கொட்டில் = ஏஎக்கொட்டில்

"ஏஎன் இறுதிக்கு எகரம் வருமே" என்ற விதிப்படி ஏ என்னும் சொல் எகரம் பெற்றது. மற்றும் பொது விதிப்படி வல்லொற்றுமிக்கு ஏஎக்கொட்டில் என முடிந்தது. (ஏ–அம்பு; கொட்டில்–இருப்பிடம்.)

ஏ + கொட்டில்
ஏ + எ + கொட்டில்
ஏ + எ + க் + கொட்டில் = ஏஎக்கொட்டில்.

## 4. பனை + அட்டு = பனாஅட்டு

"பனையின் முன்னர் அட்டு வரு காலை
நிலையின் ருகும் ஐயென் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி ளுன" என்ற விதிப்படி பனை என்பதன் ஐகாரம் கெட்டு ஆகாரம் தோன்றிப் பனா என்ருகி அட்டு என்பதனெடுங் கூடிப் பனாஅட்டு என முடிந்தது.

பனை + அட்டு
பன் + அட்டு
பன் + ஆ + அட்டு = பனாஅட்டு.

## 5. விச்சை + வாதி = விச்சாவாதி

விச்சையான் உயர்ந்த வாதி என வேற்றுமைப் பொருள் படுங்கால், "பனையின் முன்னர்" என்ற நூற்பாவின் ஆவயின் என்ற இலேசான், விச்சை என்பதன் ஐகாரம் கெட்டு ஆகாரம் வந்து விச்சாவாதி என முடிந்தது. (இது வேற்றுமை முடிபு)

விச்சையும் வாதியும் என உம்மைத் தொகையாய் அல்வழிப் பொருள்படுங்கால், "செய்யுள் மருங்கின் வேட்கை" என்னும் அல்வழி நூற்பாவை வேற்றுமைக்கு முன்கூறுத முறையன்றிக் கூற்றினால் விச்சை என்பதன் ஐகாரம் கெட்டு, ஆகாரம் தோன்றி விச்சாவாதி என முடிந்தது. (இது அல்வழி முடிபு)

## 6 கோ + இல் = கோயில்

"இல்லொடு கிளப்பின் இயற்கை யாகும்" என்ற விதிப்படி கோ என்ற ஓகார ஈறு இல்லென்ற சொல்முன் ஓகரம் மிகாது இயல்பாயிற்று. பின்னர், "எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்" என்ற விதிப்படி யகர உடம்படுமெய் பெற்று, "புள்ளியீற்றுமுன் உயிர்தனித்தியலாது" என்ற விதிப்படி உயிர் ஏறிக் கோயில் என முடிந்தது.

97. உயிர் மயங்கியலில் மாட்டேறு கூறுவதில் ஆசிரியர் மேற்கொண்ட முறையை வரைக. (1953)

## உயிர் மயங்கியலில் மாட்டேறு

ஆசிரியர் தொல்காப்பியர் அகர இறுதி அல்வழியில் வல்லொற்று மிகும் என்றார். இதனோடு வேற்றுமையை "வேற்றுமைக் கண்ணும் அதனோரற்றே" என மாட்டெறிந்தார். பலவற்றிறுதியை உருபியலுடன் மாட்டெறிந்து வற்றுப் பெறவைத்தார்.

ஆகார இறுதி அல்வழியை "ஆகார இறுதி அகர இயற்றே" என அகர இறுதி அல்வழியுடன் மாட்டெறிந்தார். ஆகார இறுதி வேற்றுமையை ஆகார இறுதி அல்வழியுடன் மாட்டெறிந்தார். (இளம்பூரணரும் நச்சரும் அகர இறுதியுடன் மாட்டெறிந்ததாக உரைப்பர்.)

இகர இறுதி அல்வழி முடிபு தொகை மரபுள் கூறப்பட்ட படியால், இகர இறுதி வேற்றுமை முடிபு மட்டும் உயிர்மயங்கியலில் கூறப்படுகிறது. இம்முடிபை அகர ஈற்றுடன் மாட்டெறியாமல் "வல்லெழுத்து மிகும்" என்று விதந்து விதி கூறினர்.

ஈகார இறுதி அல்வழியை ஆகார ஈற்றுடன் மாட்டெறிந்தார். ஈகார இறுதி வேற்றுமையை இவ்வீற்று அல்வழியுடன் மாட்டெறிந்தார். (இளம்பூரணரும் நச்சரும் ஆகார ஈற்றுடன் மாட்டெறிந்ததாக உரைப்பர்.)

உகர இறுதி அல்வழியை "உகர இறுதி அகர இயற்றே" என அகர ஈற்றுடன் மாட்டெறிந்தார். (இகர ஈற்று அல்வழி உயிர்மயங்கியலில் கூறப்படாமல் தொகை மரபில் கூறப்பட்டதால் உகர இறுதியை இகரத்தொடு மாட்டெறியாமல் அகரத்தொடு மாட்டெறிந்தார். உகர இறுதி வேற்றுமையை இவ்வீற்று அல்வழியுடன் மாட்டெறிந்தார். (உரையாளர்கள் அகரத்தொடு மாட்டெறிந்ததாக உரைப்பர்.)

ஊகார இறுதி அல்வழியை "ஊகார இறுதி ஆகார இயற்றே" என ஆகார இறுதியுடன் மாட்டெறிந்தார். (ஈண்டு ஆசிரியர் இவ்விறுதியை ஈகார இறுதியுடன் மாட்டெறிதலே பொருந்தும். "ஊகார இறுதி ஈகார இயற்றே" என்று நூற்பா செய்திருக்கக்கூடும். ஏடு பெயர்த் தெழுதுவார் பிழைபட எழுதினர்கள் போலும்.) ஊகார இறுதி வேற்றுமையை இவ்வீற்று அல்வழியுடன் மாட்டெறிந்தார். (உரையாளர்கள் ஆகார இறுதியுடன் மாட்டெறிந்ததாக உரைப்பர்.)

எகர இறுதியும், ஒகர இறுதியும் பெயர்க்கு ஈருகா வாகலின் மாட்டெறியப்படவில்லை.

ஏகார இறுதி அல்வழியை ஊகார இறுதியுடன் மாட்டெறிந்தார். ஏகார இறுதி வேற்றுமையை இவ்வீற்று அல்வழியுடன் மாட்டெறிந்தார். (உரையாளர்கள் ஊகார இறுதியுடன் மாட்டெறிந்ததாக உரைப்பர்.)

ஐகார இறுதி அல்வழி தொகைமரபில் கூறப்பட்டபடியால் ஐகார இறுதி வேற்றுமை மட்டும் உயிர்மயங்கியலில் கூறப் படுகிறது. இம்முடிபை ஏகார இறுதியுடன் மாட்டெறியாமல் வல்லெழுத்து மிகும் என்று விதந்து கூறினர்.

ஓகார இறுதி அல்வழியை ஏகார ஈற்றுடன் மாட்டெறிந்தார். (இவ்விறுதியை ஐகார ஈற்றுடன் மாட்டெறியாமை ஏன்எனில், ஐகார ஈற்று அல்வழி இவ்வியலுள் கூறப் படாமல் தொகைமரபில் கூறப்பட்டதால் என்க.) சுட்டு முதல் ஐகார இறுதியை உருபியலுடன் மாட்டெறிந்து வற்றுப் பெறவைத்தார். ஓகார இறுதி வேற்றுமையை இவ் வீற்று அல்வழியுடன் மாட்டெறிந்தார்.

ஔகார இறுதி அல்வழியும் வேற்றுமையும் வல்லெழுத்து மிகும் என்று விதந்து கூறினர். இதனை ஓகார ஈற்றுடன் மாட்டெறியவில்லை. (ஈண்டுத் தொல்காப்பியர் "ஔகார இறுதி ஓகார இயற்றே" எனவும், "வேற்றுமைக் கண்ணும் அதனோரற்றே" எனவும் மாட்டெறிய வேண்டும். அவ்வாறு மாட்டெறியாது விதந்து கூறியது, ஏனை இறுதிகளைப் போலாமல் இவ்வீறு உகரமும் உடன் பெறுத லின் போலும்.)

இவ்வாறு ஈறுகளை மாட்டெறிந்ததோடன்றி, மழை யென்கிளவி வளியியல் நிலையும்" "வளிஎன வரூஉம் பூதக் கிளவியும், அவ்வியல் நிலையும் செவ்விதென்ப" " பனி என வரூஉம் காலவேற்றுமைக்கு அத்தும் இன்றும் சாரியை யாகும்" என ஒரு மாட்டேறு கூறினர். மற்றும் விசை மரக் கிளவி முதலாக ஒரு மாட்டேறும் கூறினர்.

முடிபு: ஔகாரம், ஐகாரம், இகரம் ஆகிய இறுதிகள் மாட்டெறியப்படவில்லை. அல்வழி அல்வழிகளுடனும், வேற்றுமை அவ்வவ்வீற்று அல்வழியுடனும் மாட்டெறியப் பட்டுள்ளன. நெடில் இறுதிகள் நெடில் இறுதிகளுடனும், குறில் இறுதிகள் குறில் இறுதிகளுடனும் மாட்டெறியப் பட்டுள்ளன; ஆனால் ஆகார நெடில் மட்டும் அகரக் குறிலுடன் மாட்டெறியப்பட்டுள்ளது. இவ்வாறு ஈறுபற்றிய மாட்டேறுகளே அன்றி மழை. விசை போன்ற சொல் பற்றிய மாட்டேறுகளும், சுட்டுப்பெயர் மாட்டேறு களும், உருபியலை நோக்கிய மாட்டேறுகளும் வந்துள்ளன.

98. "ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை" "மகன் வினை கிளப்பின் முதனிலை யியற்றே" "ஆறென்கிளவி முதல் நீடும்மே" — இவற்றின் கருத்துக்களை விளக்குக. (1953)

(1) ணகாரஇறுதி வல்லெழுத்து வரும்போது வேற்றுமைப் புணர்ச்சியில் டகாரம் ஆகும் என்பது பொது விதி. ஆண் பெண் என்னும் விரவுப்பெயர்கள் ணகார இறுதியாயினும் அவ்வீற்று அஃறிணைப் பெயர் அல்வழி முடிபு போல இயல்பாய் முடியும். இதனையே 'ஆணும் பெண்ணும அஃறிணை இயற்கை' என்ற நூற்பா தெரிவிக் கின்றது. (எ-டு) ஆண்கை; பெண்கை.

(2) யகரஇறுதி வல்லெழுத்து வரும்பொழுது வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லொற்று மிகும் என்பது பொது விதி. தாய் என்பது யகரவிறுதியாயினும் இது இயற்கையாய் முடியும். இதனைத் 'தாயென்கிளவி இயற்கை யாகும்' என்ற நூற்பா தெரிவிக்கின்றது. (எ-டு) தாய்கை, தாய்செவி. இனி அத்தாய் என்னும் சொல் மகன் என்னும் சொல்லை அடைமொழியாகவும் பெற்று மகன் வினையாகிய பகைமைப்பொருளால் விதந்து சொல்லப்படும்போது பொதுவிதிப்படி மிக்கு முடியும். இதனையே, "மகன்வினை

கிளப்பின் முதனிலையியற்றே" என்ற நூற்பா தெரிவிக்கின்றது. மகன்வினைஎன்பது ஈண்டு மகனுல் தாய்க்கு உண்டாம் உதவி நிலையின்றிப் பகைமை கொண்ட நிலையைக் குறிக்கும். முதனிலை என்பது பொது விதியை மாட்டேற்ருன் தழுவியது. (எ-டு) மகன்தாய்க்கலாம்.

(3) ஒன்று முதலிய எண்கள் பத்து என்னும் எண்ணுப் பெயருடன் கூடும்போது மூன்றும் ஆறும் நெடு முதல் குறுகும் என்று கூறப்பட்டது. பிறகு அவ்விதி அளவுப்பெயர் நிறைப்பெயர் வருங்காலும் கொள்ளப் பட்டது. அதன்பின் உயிர் முதன் மொழி வருங்கால் இவ் விதி மாற்றப்படவேண்டி வருகின்றது. எனவே, முன்பு நெடுமுதல் குறுகியது இப்போது நீளும் என விதி கூறும் பொருட்டு, "ஆறென் கிளவி முதல் நீடும்மே" என்ருர் தொல்காப்பியர். ஆறு முன்விதிப்படி அறு என்ருகியது. அகல் என்ற உயிர் முதன் மொழி வரும்போது ஆறு என முதல் நீண்டது. "புள்ளி யீற்றுமுன்" என்ற விதிப்படி குற்றுகர ஈற்றினுடன் உயிர் முதல் ஏறி ஆறகல் என முடிந்தது.

## 99. "தொழிற் பெயரெல்லாம் தொழிற்பெயரியல" — இச்சூத்திரம் வருமிடங்களைச் சுட்டிப் பொருள் தருக. இதனுல் பெறப்படும் உண்மை யாது? (1955)

"தொழிற்பெயரெல்லாம் தொழிற்பெயரியல" — என்ற நூற்பா புள்ளி மயங்கியலில் ணகர மகர லகர ளகரங்களாகிய நான்கு ஈறுகளிலும் நான்கு முறை வருகின்றது.

அந்நூற்பாக்கள் நான்கும் முறையே, (1) ணகாரவீற்றுத் தொழிற்பெயர் இருவழியிலும் ஞகாரவீற்றுத் தொழிற் பெயரைப்போல வன்கணம் வந்தவழி வல்லெழுத்தும் உகரமும் பெறும்; மென்கணமும் இடைக்கணமும் வந்த வழி உகரம் மட்டும் பெறும் எனவும், (2) மகாரவீற்றுத் தொழிற்பெயர் இருவழியிலும் ஞகார வீற்றுத் தொழிற்

பெயரைப் போல வன்கணம் வந்தவழி வல்லெழுத்தும் உகரமும் பெறும்; மென்கணமும் இடைக்கணமும் வந்தவழி உகரம் மட்டும் பெறும் எனவும், (3) லகாரவிற்றுத் தொழிற்பெயர் இருவழியிலும் ஞகார வீற்றுத் தொழிற் பெயரைப்போல வன்கணம் வந்தவழி வல்லெழுத்தும் உகரமும் பெறும்; மென்கணமும் இடைக்கணமும் வந்தவழி உகரம் மட்டும் பெறும் எனவும், (4) வகாரவிற்றுத் தொழிற் பெயர் இருவழியிலும் ஞகார வீற்றுத் தொழிற்பெயரைப் போல வன்கணம் வந்தவழி வல்லெழுத்தும் உகரமும் பெறும்; மென்கணமும் இடைக்கணமும் வந்தவழி உகரம் மட்டும் பெறும் என்வும் பொருள்படும்.

இதனுல் பெறப்படும் உண்மை: (1) ஒரு வகை நூற் பாக்கள் தொல்காப்பியத்தில் பலவிடத்தும் கையாளப் படுவதுண்டு; எனினும் அவை பொருளில் வேறுபட்டு நிற்கும்; கூறியது கூறல் ஆகமாட்டா. (2) மாணவர்க்கு நினைவாற்றல் பெருகவேண்டும் என்னும் கருத்தானும், ஒன்றன் இலக்கணத்தினை மற்ருென்றன் இலக்கணத்தொடு ஒப்பிட்டுக் கற்கவேண்டும் என்னும் கருத்தானும் தொல்காப்பியர் மாட்டேறுகளை விரும்புகின்றவர்.

**100. "கிளைப்பெயரெல்லாம் கிளைப்பெயரியல" உரையும் உதாரணமும் தருக.**

"கிளைப்பெயரெல்லாம் கிளைப்பெயரியல" — என்பது நூற்பா. இதன் பொருள்:— னகார வீற்றுக் கிளைப் பெயர்கள் எல்லாம் ணகார வீற்றுக் கிளைப்பெயர்களைப் போல இயல்பாய் முடியும்; திரிதலின்று. (கிளை — இனம், சாதி)

(எ-டு) எயின்குடி, எயின்சேரி.

இனி, எல்லாம் என்ற மிகையால் 1. அக்குச்சாரியையும் வல்லெழுத்தும் பெற்று (எயின் + கன்னி > எயின் + அக்கு + க் + கன்னி =) எயினக்கன்னி என்று முடிவதும், 2. நிலை மொழியிறுதி திரிந்து அக்கும் வல்லெழுத்தும் பெற்றுப்

(பார்ப்பான் + கன்னி > ப்ர்ப்பன் + அக்கு + க் + கன்னி =) பார்ப்பனக்கன்னி என முடிவதும், 3. சாரியை பெருது ஈறுதிரிந்து (வேளான் + குமரி > வே ள ா ண் + குமரி =) வேளாண்குமரி என முடிவதும் கொள்ளப்படும்.

101. நும் என்னும் விரவுப்பெயர் அல்வழியில் யாங்ஙனம் முடியும்? (1961)

" அல்லதன் மருங்கின் சொல்லுங் காலே
உக்கெட நின்ற மெய்வயின் ஈவர
இஇடை நிலேஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
அப்பான் மொழிவயின் இயற்கை யாகும்." என்பது

நும்மென் விரவுப்பெயர்க்கு அல்வழி முடிபு கூறுகின்ற நூற்பாவாகும். பொருள்: அல்லதன் மருங்கின் சொல்லுங் காலே — நும்மென்னும் விரவுப்பெயரை அல்வழியில் கூறுங் காலத்து; உக்கெட நின்ற மெய்வயின் — நகரத்து மீது ஏறிய உயிர் கெட நின்ற அந் நகர மெய்மீது; ஈவர — ஈகாரம் வர; இ இடை நிலேஇ — ஓர் இகரம் இடையிலே நிறுத்தி; ஈறுகெட — மகர இறுதிகெட; ரகரம் நிற்றல் வேண்டும் — மகரம் நின்ற விடத்து ரகரம் நிற்றலே ஆசிரியர் விரும்புவர். (நும் > ந்ம் > நீம் > நீஇம் > நீஇ > நீஇர் > நீயிர்.) (அங்ஙனம் முடிந்த நீயிர் என்ற சொல்) அப்பான் மொழிவயின் — கசதபக்களாகிய வருமொழி யிடத்து; இயற்கையாகும் — இயல்பாய் முடியும்.

(எ-டு) நீயிர் குறியிர்; நீயிர் சிறியிர்.

102. தாய், தந்தை, மகன் — என்னும் முறைப் பெயர்களை நிலைமொழி வருமொழிகளாக வைத்துக் கூறப்பட்டுள்ள விதிகள் யாவை? எடுத்துக் காட்டுத் தந்து விளக்குக. (1960)

<u>தாய்</u>

" தாய் என்கிளவி இயற்கையாகும்" என்பது நூற்பா. தாய் என்னும் யகர இறுதி பொது விதிப்படி மிகாமல்

இயல்பாய் முடியும். (எ-டு) தாய் + கை = தாய்க்கை; தாய் + தலை = தாய்தலை.

## தந்தை

1. இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்
மெய்யொழித் தன்கெடும் அவ்வியற் பெயரே.

2. ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு
பெயரொற் றகரம் துவரக் கெடுமே.

3. சிறப்பொடு வருவழி இயற்கை யாகும்.

4. அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியும்
நிற்றலும் உரித்தே அம்மென் சாரியை
மக்கள் முறைதொகூஉம் மருங்கி னான.

5. தானும் பேனும் கோனும் என்னும்
ஆமுறை இயற்பெயர் திரிபிட னிலவே — என்பன

நூற்பாக்கள். (1) இயற்பெயருக்கு முன் தந்தை என்னும் முறைப்பெயர் வருமாயின் தந்தை என்ற சொல்லின் முதற்கண்மெய் கெட அகரம் நிற்கும்; அவ் வியற்பெயரின் இறுதி அன் கெட்டு முடியும். (எ-டு) சாத்தன் + தந்தை > சாத்தன் + அந்தை > சாத்த் + அ ந்தை = சா த் த ந் தை. (2) ஆதன் பூதன் என்னும் இயற்பெயர்முன் தந்தை என்னும் முறைப்பெயர் வருமாயின் முன்னுயினவாறே ஆகி மேலும் நிலைமொழி இறுதி ஒற்றும் வருமொழி முதல் அகரமும் கெட்டுமுடியும். (எ-டு) ஆதன் + தந்தை > ஆத் + அந்தை > ஆ + ந்தை = ஆந்தை. 3. இயற்பெயர்கள் சிறப்புக்களுடன் வரும்போது இயல்பாய் முடியும். (எ-டு) பெருஞ்சாத்தன் + தந்தை = பெருஞ்சாத்தன்தந்தை. 4. மக்கள் (மகன்) முறைப்பெயர் வரும்போது இயற்பெயர் இறுதி அன்கெடுவழி அம்முச்சாரியை பெறும். (எ-டு) சாத்தன் + கொற்றன் > சாத்த் + அம் + கொற்றன் = சாத்தங் கொற்றன். 5. தான் பேன் கோன் என்னும் இயற்பெயர்கள் இயல்பாய்முடியும். (எ-டு) தான் + தந்தை = தான்றந்தை.

## மகன்

"மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே" என்பது நூற்பா. தாய் என்னும் யகரஇறுதி இயல்பாய் முடியு மாயினும், தாய் என்னும்சொல் மகனென்னும் சொல்லை அடையாகப்பெற்று அம்மகனுக்குரிய பகைப் பொருட்டான வினையொடு கிளக்கப்படும்போது பொது விதிப்படி வல்லொற்று மிகும். (எ-டு) மகன்தாய்க்கலாம்.

103. இயற்பெயரின்முன் தந்தை மகன் என்ற முறையுணர்த்தும் பெயர்கள் வந்தால் அவை எவ்வாறு புணரும்? (1959).

விடை 102-ல் காண்க.

104. "சிறப்பொடு வருவழி இயற்கையாகும்" என்றது எவற்றை? எடுத்துக்காட்டின் வாயிலாகப் புலப்படுத்துக. (1958)

விடை 102-ல் காண்க.

105. இயற்பெயர் முன்னர்த் தந்தை முறை வரின், இயற்பெயர் எவ்வெவ் வகையில் விகாரமடையும்? விளக்குக. (1961)

விடை 102–ல் காண்க.

106. இன்மை செப்பும் இல்லென் கிளவி வருமொழிகளோடு கூடும் செய்கையைத் தருக. (1957)

"இல்லென் கிளவி யின்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலும் ஐயிடை வருதலும்
இயற்கை யாதலும் ஆகாரம் வருதலும்
கொளத்தகு மரபின் ஆகிட னுடைத்தே." என்பது

நூற்பா. இல்லென்னும் சொல் புக்கு உறையும் வீட்டினை

உணர்த்தாமல் ஒரு பொருளின் உண்மைக்கு மறுதலை யாகிய இல்லாமையை உணர்த்துமாயின் அது அல்வழியில் ஐகாரம் இடை வரப்பெறுதலும், ஐகாரத்துடன் வல்லெழுத் துப் பெறுதலும், ஆகாரத்துடன் வல்லெழுத்துப் பெறுத லும், இயற்கையாதலும் ஆகிய நான்கு வகையான — கொள்ளத்தகும் மரபினல் — முடிபு ஆகும் இடனும் உண்டு.

(எ–டு) 1. இல் + கல் > இல் + ஐ + கல் = இல்லைகல்
2. இல் + கல் > இல் + ஐ + க் + கல் = இல்லைக்கல்
3. இல் + கல் > இல் + ஆ + க் + கல் = இல்லாக்கல்
4. இல் + கல் = இல்கல்

**107. ஐ அம் பல் என வரூஉம் இறுதிகள் பற்றிய விதியைத் தருக.**

"ஐ அம் பல் என வரூஉம் இறுதி
அல்பெயர் எண்ணும் ஆயியல் நிலையும்" என்பது நூற்பா. ஐ, அம், பல் என்னும் இறுதிகளை உடைய சொற்கள் பொருட் பெயராய் நில்லாது எண்ணுப் பொருளைத் தருமாயின் அப்போது அவற்றின் முன்வரும் ஏழ் என்னும் சொல் முதல்குறுகாமலும் உகரம் பெருமலும் இயல்பாய் நிற்கும்.

(எ–டு) ஏழ்தாமரை, ஏழ்வெள்ளம், ஏழாம்பல்.

தாமரை, வெள்ளம், ஆம்பல் என்பன பொருள்களைக் குறிக்காமல் எண்ணிக்கையைக்குறித்தன. அவை எத்துணை எண்என்பது இப்போது விளங்கவில்லை யாயினும் அவை மிகுதிப்பொருட்டு என்பது மட்டும் புலனுகின்றது. தற்காலத்தில், தான் எதிர்பார்த்த அளவுக்குமேல் ஒரு பொருள் ஒருவனுக்குக் கிடைக்குமாயின் அவன் "வெள்ளம் வெள்ளம்" என்று கூறுவதைக் கேட்கின்ருேம். அதன் பொருள் மிகுதி என்பது தானே! அதுபோல் தாமரை, ஆம்பல் என்பனவும் மிகுதிப் பொருள் தந்த எண்ணுப் பெயர்களாகும்.

108. புணர்ச்சிவிதி கூறுக:— மராஅடி (1960), அங்கை, இலம்படு (1955), தேத்திருல், ஆந்தை, முன்றில் (1955), கஃறீது, முஃடீது.

## 1. மரம்+அடி = மராஅடி

"மகர இறுதி வேற்றுமையாயின் துவரக்கெட்டு" என்ற விதிப்படி மரம் என்பதன் இறுதிகெட்டு, "அகர ஆகாரம் வரூஉம் காலை, ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே" என்ற விதிப்படி ஈற்றயல்அகரம் நீண்டு மரா என்ருகி அடி என்பதனுடன் கூடி மராஅடி என முடிந்தது. (மரம் + அடி > மர + அடி > மரா + அடி = மராஅடி)

## 2. அகம்+கை=அங்கை

"அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வுரைநிலை யின்றே யாசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னுன." என்பது நூற்பா. இதன்படி அகம் என்னும் சொல்முன் கை என்னும் சொல் வந்தவுடன் அகம் என்பதன் முன்னிலைஅகரம் ஒழிய(நிற்க)மற்றவை கெட்டன. அதன்பின் மெல்லெழுத்து மிக்கு அங்கை என முடிந்தது. அகம்+கை>அ+கை> அ+ங்+கை=அங்கை.)

## 3. இலம்+படு = இலம்படு

"இலமென் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலும் உரித்தே செய்யு ளான" என்பது நூற்பா. "மகர இறுதி வேற்றுமையாயின் துவரக்கெட்டு" என்ற விதிப்படி இலம் என்பதன் மகரம் கெடவேண்டும். "நிலையலும் உரித்து" என்பதனுல் இந்நூற்பா அதனை விலக்குகிறது. எனவே இலம் என்பது மகரம் கெடாமல் இலம்படு என முடிந்தது.

### 4. தேன்+இருல் = தேத்திருல்

" இருல் தோற்றம் இயற்கையாகும்" என்ற விதிப்படி தேன் என்னும் சொல்லுடன் இருல் என்னும் சொல்கூடும் போது தேவிருல் என இயற்கையாய் முடியும். இனி, "ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்தே" என்ற விதிப்படி னகரம் தகரமாகி மற்ருேர் தகர ஒற்று மிக்குத் தேத்திருல் என்று முடிந்தது. (தேன் + இருல் = தேனிருல்; தேன் + இருல் > தேத் + த் + இருல் = தேத்திருல்.)

### 5. ஆதன்+தந்தை=ஆந்தை

விடை 101-ல் காண்க

### 6. இல்+முன்=முன்றில்

இல்லென்னும் சொல்லுடன் முன்னென்னும் சொல் கூடுங்கால் மரூஉவாகி முன் இல் என மாறி நின்று.

"முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்லென் கிளவிமிசை நகரம் ஒற்றல்
தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே" என்ற விதிப்படி இல்லென்ற சொல்லின்மேலே றகர ஒற்றுவர முன்றில் என முடிந்தது. இது பழைமையான மரூஉ முடிபு. (இல் + முன் > முன் + இல் > முன் + ற் > இல் = முன்றில்.)

**109. மயக்க விதி தருக:— குளஅம்பல் (1957), ஆற்கொண்டான் (1957), வேளாண் குமரி, பார்ப்பனக் கன்னி, கஃறீது, முஃடீது.**

### 1. குளம்+ஆம்பல் = குளாஅம்பல்

" மகரஇறுதி வேற்றுமையாயின் துவரக் கெட்டு" என்ற விதிப்படிக் குளம் என்பதன் மகரம் கெட்டுக் குள என்ருகி, " அகர ஆகாரம் வரூஉம் காலை ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே" என்ற விதிப்படி ஈற்றயல்

அகரம் நீண்டு குளா என்றாகிக் குளாஆம்பல் என நின்றது. இனி, "மெல்லெழுத்துறழும்" என்ற நூற்பாவில் வந்த செல்வழியறிதல் என்ற மிகையான் வருமொழி ஆகாரம் குறுகிக் குளாஅம்பல் என முடிந்தது. (குளம்+ஆம்பல் > குள + ஆம்பல் > குளா + ஆம்பல் > குளா + அம்பல் = குளாஅம்பல்.)

## 2. ஆன் + கொண்டான் = ஆற்கொண்டான்

ஆன் - அங்கு; ஆற்கொண்டான் - அவ்விடத்துக் கொண்டான். "மன்னும் சின்னும் ஆனும் ஈனும், பின்னும் முன்னும் வினைஎஞ்சு கிளவியும், அன்ன இயல என்மனார் புலவர்" என்ற நூற்பாவானும், இதன் மாட்டேறான "னகார இறுதி வல்லெழுத் தியையின், றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே" என்ற நூற்பாவானும் ஆன் என்னும் சொல்லின் னகாரம் றகாரமாய்த் திரிந்து முடிந்தது.

## 3. வேளான்+குமரி=வேளாண்குமரி

விடை 99-ல் காண்க.

## 4. பார்ப்பான்+கன்னி=பார்ப்பனக்கன்னி

விடை 99-ல் காண்க.

## 5. கல்+தீது=கஃறீது

"லனஎன வரூஉம் புள்ளி முன்னர்த்
தநஎன வரின் றனவா கும்மே" என்றவிதிப்படி வருமொழியின் தகரம் றகரமாய்த் திரிந்தது. "லகார இறுதி னகார இயற்றே" என்ற நூற்பாவின் மாட்டேறான "னகார இறுதி வல்லெழுத்தியையின், றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே" என்ற விதிப்படி கல்லென்னும் நிலைமொழி லகரம் றகரமாய்த் திரிந்து கற்றீது என்றாகியது. இனி அதுவே,

"தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே" என்ற
விதிப்படி றகரமாய்த் திரிந்த லகரம் ஆய்தமாக நின்று கஃறீது என முடிந்தது. (கல்+தீது > கல்+றீது > கற்+றீது = கற்றீது ; கற்+றீது > கஃ+றீது = கஃறீது.)

## 6. முள் + தீது = முஃடீது

"ணள என் புள்ளிமுன் டண எனத் தோன்றும்" என்ற விதிப்படி வருமொழியின் தகரம் டகரமாய்த் திரிந்தது. "ளகார இறுதி ணகார இயற்றே" என்ற நூற்பாவின் மாட்டேறான "ணகார இறுதி வல்லெழுத்தியை யின், டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே" என்ற விதிப்படி முள்ளென்னும் நிலைமொழி ளகரம் டகரமாய்த் திரிந்து முட்டீது என்றாகியது. இனி அதுவே,

"ஆய்தம் நிலையலும் வரைநிலை யின்றே
தகரம் வரூஉம் காலை யான" என்ற விதிப்படி
டகரமாய்த் திரிந்த ளகரம் ஆய்தமாக நின்று முஃடீது என முடிந்தது. (முள்+தீது > முள்+டீது > முட்+டீது = முட்டீது; முட்+டீது > முஃ+டீது = முஃடீது.)

**110. பொலந்தேர், வல்லப்பலகை, அஃகடிய, தாழக்கோல் — இவற்றுள் நிலைமொழிகள் எவை? அவை அடைகின்ற மாறுபாட்டிற்குரிய விதிகளும் தருக. (1958)**

## 1. பொலந்தேர்

இதன் நிலைமொழி போன் என்னும் சொல்.

"பொன்னென் கிளவி ஈறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
செய்யுள் மருங்கின் தொடரிய லான"

என்ற விதிப்படி, பொன் என்பதன் ஈறுகெட்டு லகர உயிர் மெய்யும் மகரஒற்றும் தோன்றிப் பொலம் என்றாகியது.

இனித் தொடரியலான என்ற மிகையால் வருமொழியான தேர் என்பதற்கியைய பொலம் என்பதன் மகரம் நகரமாய்த் திரிந்து பொலந்தேர் என முடிந்தது.

## 2. வல்லப் பலகை

இதன் நிலைமொழி வல் என்னும் சொல். (வல்–சூதாட்டம்)

"வல்லென் கிளவி தொழிற்பெய ரியற்றே".

என்ற விதிப்படி வல்லென்பது உகரமும் வல்லொற்றும் பெற்று (வல் + பலகை > வல் + உ + ப் + பலகை =) வல்லுப் பலகை என்றாகியது.

"நாயும் பலகையும் வரூஉங் காலை
ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே
உகரம் கெடுவழி அகரம் நிலையும்" என்ற

விதிப்படி வல்லென்ற சொல்முன் நாய், பலகை என்ற சொற்கள் வரும்போது முன் விதிப்படி வந்த உகரம் கெடும்; உகரம் கெடுவழி அகரம் நிற்கும். அதன்படி (வல்லு > வல்ல் > வல்ல என்றாகி) வல்லப்பலகை என்று முடிந்தது.

## 3. அஃகடிய

இதன் நிலைமொழி அவ் என்னும் பன்மைச்சுட்டுச்சொல்.

"வேற்றுமை அல்வழி ஆய்தம் நிலையும்"

என்ற விதிப்படி அவ் என்னும் சுட்டின் வகரம் அல்வழிப் புணர்ச்சியில் ஆய்தமாகத் திரிந்து அஃகடிய என முடிந்தது.

## 4. தாழக்கோல்

இதன் நிலைமொழி தாழ் என்னும் சொல். (தாழ்-பூட்டு)

தாழென் கிளவி கோலொடு புணரின்
அக்கிடை வருதல் உரித்து மாகும்"

என்ற விதிப்படி தாழ் என்னும் சொல் முன் கோல் என்னும் சொல் வரும்போது அக்குச் சாரியை பெற்றது. (தாழ் + அக்கு + கோல்)

"எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கின் இறுதிமெய்ம் மிசையொடும் கெடுமே
குற்றிய லுகரம் முற்றத் தோன்ருது"

என்ற விதிப்படி அக்குச்சாரியையின் குற்றியலுகர இறுதியும் அது ஏறிநின்ற மெய்யும், அம்மெய்ம்மிசை மெய்யும் கெட்டு அ என நின்றது. பின் வல்லொற்று மிக்கு முடிந்தது. (தாழ் + அக்கு + கோல் > தாழ் + அ + க் + கோல் = தாழக்கோல்.)

111. "மக்கள்என்னும் பெயர் நிலைக்கிளவி – தக்கவழி அறிந்து வலித்தலும் உரித்தே" — இதற்கு இளம்பூரணர் கூறும் கருத்தை எடுத்துக் காட்டால் விளக்கி, "மக்கட்பண்பில்லாதவர்" "மக்கட் சுட்டு" என்பவற்றிற்கு அவர் கருத்துப் பொருந்துமா என்பதையும் ஆராய்க. (1960)

மக்கள் என்னும் சொல் உயர்திணை. தொகைமரபில், "உயிரீருகிய உயர்திணைப்பெயரும், புள்ளியிறுதி உயர்திணைப்பெயரும், எல்லாவழியும் இயல்பென மொழிப" என்று கூறிய நூற்பாவினுல் மக்கள் என்னும் சொல் இயல்பாய் முடியும்.

இனித் தொகைமரபில் எய்திய இலக்கணத்தை விலக்கிப் பிறிதுவிதி ஒன்றைப் புள்ளிமயங்கியலில், "மக்கள் என்னும் பெயர்நிலைக் கிளவி, தக்கவழி யறிந்து வலித்தலும் உரித்தே" என்ற நூற்பாவினுல் தொல்காப் பியனுர் கூறினுர். இதனுல் மக்கள் என்னும் சொல்லின் இறுதி திரியலாம் என்பது ஏற்படுகிறது.

ஆனுல் இளம்பூரணர், "தக்கவழி" என்று கூறி இருப்பதனுல், திரிந்துமுடியும் முடிபினை உயிரும் உடம்பும் ஒன்றிய காலத்துக் கொள்ளலாகாது; உடம்பினின்று உயிர் நீங்கியகாலத்துக் கொள்ளவேண்டும்" என்கிருர். இதே கருத்துடையவராய் நச்சரும், "இக்கிடந்தது மக்கட்டலை"

என்ற உதாரணம் காட்டினர்; பின் அவரே, "மக்கட்பண்பு, மக்கட்சுட்டு" எனச் சிறுபான்மை வரும் எனக் காட்டுகிறார்.

தொல்காப்பியர் தமது சொல்லதிகார நூற்பாவில் மக்கட்சுட்டு என்று குறிப்பது உடம்பொடு உயிர்கூடிய காலத்தது ஆகலானும், வள்ளுவர் தமது குறளில் மக்கட்பண்பில்லாதவர் என்று குறிப்பதும் அந்நிலைக்குரித்தாகலானும், நச்சினார்க்கினியர் சிறுபான்மை வரும் எனக் குறித்தலானும், உயிர்நீங்கிய காலத்திற்குரியது எனத் தொல்காப்பியர் குறித்திலராகலானும் இளம்பூரணர் கருத்துப் பொருந்தாதென்பது விளங்கும்.

112. இருளென்கிளவி வெயிலியல் நிலையும் — என்பது முதலிய மாட்டேற்று நூற்பாக்களைஎழுதுக.

1. இருளென் கிளவி வெயிலியல் நிலையும்.
2. வெயிலென் கிளவி மழையியல் நிலையும்.
3. மழையென் கிளவி வளியியல் நிலையும்.
4. வளியென வருஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் நிலையும் செவ்வி தென்ப.
5. பனியென வருஉம் கால வேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை யாகும்.

113. எகின்மரத்தின் விதிக்கு மேற்கொள்ளும் மாட்டேற்று விதிகளை எழுதுக.

1. எகின் மரமாயின் ஆண்மர இயற்றே.
2. ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே.
3. பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மொடு சிவணும்
ஐயென் இறுதி அரைவரை நந்து கெடுமே
மெய்யவண் ஒழிய என்மனார் புலவர்.

114. இல்லமரப்பெயர்க்குரிய மாட்டேறுகளைத் தருக.

1. இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே.
2. விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும் ஆமுப் பெயரும் சேமர இயல.
3. சேஎன் மரப்பெயர் ஒடுமர இயற்றே.
4. ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே.
5. உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.

115. திங்கட்பெயர் நாட்பெயர்பற்றிய மாட்டேறுகளை எழுதுக.

1. நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
அத்தும் ஆன்மிசை வரைநிலை யின்றே
ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர்.
2. திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன.
3. திங்கள் முன்வரின் இக்கே சாரியை.
4. நாள்முன் தோன்றும் தொழில்நிலைக்கிளவிக்கு
ஆனிடை வருதல் ஐயம் இன்றே.

116. மரூஉ முடிபு என்று விதிக்கப்பட்ட நூற்பாக்கள் யாவை?

மரூஉ முடிபு கூறிய நூற்பாக்கள்

1. பலரறி சொன்முன் யாவர் என்னும்
பெயரிடை வகரம் கெடுதலும் ஏனை
ஒன்றறி சொன்முன் யாதென் வினாவிடை
ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்
மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே.
2. அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை ஒழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை இன்றே ஆசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான.

3\. முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்லென் கிளவிமிசை றகரம் ஒற்றல்
தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே.

117\. "ஈரொற்றுத் தொடர்மொழி இடைத் தொடராகா"— இதற்கு உரிய உரைகளை ஆய்க.

"அவற்றுள்,
ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொடராகா" என்பது நூற்பா.

## இளம்பூரணர் உரைக்கருத்து

அவற்றுள் — மேற்கூறப்பட்ட ஆறுவகைக் குற்றுகரங்களுள் ; ஈரொற்றுத் தொடர் மொழி — ஈரொற்றுத்தொடர் மொழியாக வரும் குற்றுகரங்கள் ; இடைத்தொடர் ஆகா — இடைத் தொடர்க் குற்றுகரம் எனப்படா ; (வன்றொடர்க் குற்றுகரம், மென்றொடர்க் குற்றுகரம் எனப்படும்.)

ஈர்க்கு, மொய்ம்பு என்பன ர் ய் என்னும் இடையின ஒற்றுக்களுடன் வந்திருப்பினும் இவை இடைத் தொடர்க் குற்றுகரம் எனப்படா. ஈர்க்கு என்பது ககர ஒற்றுப் பெற்றிருத்தல் நோக்கி வன்றொடர் எனவும், மொய்ம்பு என்பது மகர ஒற்றுப் பெற்றிருத்தல் நோக்கி மென்றொடர் எனவும் கூறப்படும்.

## நச்சினார்க்கினியர் உரைக்கருத்து

அவற்றுள் — மேற்கூறப்பட்ட ஆறுவகைக் குற்றுகரங்கள் ; ஈரொற்றுத் தொடர்மொழி — ஈரொற்றுத் தொடர் மொழியாக வரும் சொல்லில் ; (முதல் ஒற்று இடையின ஒற்றாக வந்தால்) இடைத்தொடர்ஆகா — மேல்வரும் மற்றோர் ஒற்று இடையின ஒற்றாக நிற்காது. (வல்லின ஒற்றாகவும், மெல்லின ஒற்றாகவும் தொடர்ந்து நிற்கும்.)

ஈர்க்கு, மொய்ம்பு என்பனவற்றில் ர் ய் என்பன முதற் கண் இடையின ஒற்றாக வருதலின் பின்நிற்கும் ஒற்று க், ம் என வல்லொற்றாகவும், மெல்லொற்றாகவும் வந்தன.

## ஆய்வு

இரு உரை ஆசிரியர்களும் ஒரே வகையான உதாரணங்கள் காட்டினும் கருத்தில் வேறுபட்டுள்ளனர். இவ்விருவர் உரையுள், நச்சர் கூறும் உரை, "யரழ என்னும் மூன்றும் முன் ஒற்றக் கசதப ஙஞநம ஈரொற்றாகும்" என்ற நூற்பாவான் பெறப்படுதலினுல் நச்சர் உரை பொருந்தாதென பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் மறுத்துள்ளார்.

மற்றும், "குற்றுகரம் ஆறு என்று அறிந்த மாணவன், அக்குற்றுகரங்கட்கு ஈற்றயல் எழுத்தை நோக்கிப் பெயரிடுங்கால், ஈர்க்கு மொய்ம்பு என்பவற்றில் ஈற்றயலில் ஈரொற்றிருத்தலின் எவ்வொற்றை நோக்கிப் பெயரிடுவது என்று ஐயுறுவான் அன்றே! அவனது ஐயம் அறுக்க இடைத்தொடர் எனல் ஆகாது" என்று இந்நூற்பா கூறுகின்றதாகலின் இளம்பூரணர் உரையே சிறக்கும்.

### 118. "எல்லா இறுதியும் உகரம் நிறையும்" "எல்லா இறுதியும் உகரம் நிலேயும்" — இவற்றுள் சிறந்தபாடம் எது? ஆய்க.

உகரம் நிறையும் என்பது இளம்பூரணர் கொண்ட பாடம். இப்பாடம் கொண்டு, அல்வழியிலும் வேற்றுமையிலும் குற்றுகரச் சொற்கள் புணர்மொழிக்கண் வரின் உகரம் நிறைந்து நிற்கும். நாகு எனத் தனித்துக் கூறினுல் உகரம் குற்றுகரம். நாகு கடிது எனப் புணர்மொழிக்கண் வைத்துக்கூறினுல் உகரம் முற்றுகரம்." என்பர் இளம்பூரணர்.

உகரம் நிலேயும் என்பது நச்சினுர்க்கினியர் கொண்ட பாடம். இப்பாடம் கொண்டு, "அல்வழியிலும் வேற்றுமையிலும் குற்றுகரச் சொற்கள் புணர்மொழிக்கண் வரினும் உகரம் தன் அரைமாத்திரை பெற்றே நிற்கும். நாகு எனத் தனித்துக் கூறினும் நாகு கடிது எனப் புணர்மொழிக்கண் வைத்துக் கூறினும் உகரம் குற்றுகரமாய் அரை மாத்திரையே பெறும்" என்பர் நச்சினுர்க்கினியர்.

மேலும், "உகரம் நிறையும் எனப் பாடம் ஓதிப் புணர் மொழிக்கண் ஒருமாத்திரை பெறும் என்ருல் பன்மொழிப் புணர்ச்சியான செய்யுள் இலக்கணத்தில் நேர்பு அசை, நிரைபு அசை கோடலும், அவற்ருன் வஞ்சிச்சீர் அறுபது கோடலும், தொடை 19,291 என்று கோடலும் இன்ருய்க் குற்றுகரம் முற்றுகரமெனப்பட்டு மாறுகொளக்கூறல் என்னும் குற்றம் தங்கும்" என இளம்பூரணரது உரையை நச்சர் மறுத்துள்ளார்.

ஆய்வு: இவ்விரண்டு பாடங்களில் 'உகரம் நிறையும்' என்ற இளம்பூரணர் பாடமே சிறக்கும். 'இருவகை உகரமோ டியைந்தவை வரினே, நேர்பும் நிரைபும் ஆகும் என்ப' என நேர்பு நிரைபு அசைகளுக்கு முற்றுகரத்தையும் தொல்காப்பியர் கொள்ளுதலானும், அதனுல் வஞ்சி உரிச்சீர் அறுபது எனக் கோடல் தவருகாதாகலானும், தொடைகளை 13,699 என இளம்பூரணரும் 13,708 எனப் பேராசிரியரும் 19,291 என நச்சரும் தம்முள் மாறுபட்டுக் கூறி யிருத்தலானும் நச்சர் உரை பொருந்தாது என வே. வேங்கடராஜுலு ரெட்டியார் குறிப்பிடுகின்ருர்.

119, "முன்னுயிர் வருமிடத்து ஆய்தப்புள்ளி, மன்னல் வேண்டும் அல்வழியான" — பொருள் கூறி விளக்குக. (1961)

"முன்னுயிர் வருமிடத்து ஆய்தப் புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழி யான" என்பது நூற்பா. அஃது, இஃது, உஃது என்னும் சுட்டு முதலாகிய ஆய்தத் தொடர் மொழிகள் ஆய்தம் கெட்டு அன்சாரியை பெறும் என்பது பொதுவிதி. இனி அம்மொழிகள் உயிர் வருமிடத்து ஆய்தம் கெடாது அல்வழிக்கண் நின்று முடியும் என்று இந்நூற்பா கூறுகிறது.

அஃது + அடை = அஃதடை
அஃது + ஆடை = அஃதாடை

இனி முன் என்ற மிகையால் வேற்றுமையிலும் இவ்விதி கொள்ளலாம். அஃது + ஆட்டம் = அஃதாட்டம்.

120. தொண்ணூறு, தொள்ளாயிரம் என்னும் சொற்களின் தோற்றத்தை ஆய்க.

## தொல்காப்பியர் கருத்து

" ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்
முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்
பஃதென் கிளவி ஆய்த பகரங்கெட
நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகாரம் ஆகும் " என்ற நூற்பாவின்படி ஒன்பஃது என்பதன் முன் பஃது என்பது வர ஒன்பதன் ஒகரத்தின்மேல் தகரஒற்றுக்கூடி, இரண்டாவதான னகரஒற்று ணகரமாக இரட்டித்துத்தொண்ண்பஃது என்றுயிற்று. இனி நிலைமொழி வருமொழி இரண்டிலும் உள்ள ஆய்தமும் பகரமும்கெட, நிலைமொழியில் உள்ள து பொதுவிதியான் கெட, ஊகாரம் வர, வருமொழியில் உள்ள துவ்வில் தகரம் றகரமாகத் தொண்ணூறு என முடிந்தது.

ஒன்பஃது + பஃது
தொண்ண் பஃது + பஃது
தொண்ண் + து
தொண்ண் + ஊ + று = தொண்ணூறு

" ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊ ஆ வாகும் இயற்கைத் தென்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகரம் ஒற்றும் " என்ற விதிப்படி ஒன்பஃது என்பதன் முன் நூறு என்பது வர,

ஒன்பதன் ஒகரத்தின் மேல் தகர ஒற்றுக்கூடி, இரண்டாவ தான னகரஒற்று ளகாரமாக இரட்டித்துத் தொள்ள்என்ரு யிற்று. நூறு என்பதில் நகரமெய் கெட்டு, ஊகாரம் ஆகாரமாகி, நடுவில் இகரமும் ரகரஉயிர்மெய்யும் வந்து, றுவ்வில் றகரம் மகரமாகித் தொள்ளாயிரம் என முடிந்தது.

ஒன்பஃது + நூறு
தொள்ள்பஃது + நூறு
தொள்ள் + ஆறு
தொள்ள் + ஆ + இ + ர + ம் = தொள்ளாயிரம்.

இவ்வாறு தொண்ணூறு, தொள்ளாயிரம் என்னும் புணர்ச்சியில் நிலைமொழியில் உள்ள ஒகரம் ஒன்று தவிர வேறு தொடர்புகள் இன்மையால் இக்கருத்துப் பொருந்தா தென வே. வேங்கடராஜுலு ரெட்டியாரும், இம்முடிபு எவ் வகையிலும் பொருந்தாதென ஞா. தேவநேயப்பாவாணரும் மறுக்கின்றனர்.

## நேமிநாதர் கருத்து

"ஒன்பஃது என்பதுடன் பத்து நூறு என்பவற்றைக் கூட்டும்போது, ஒன்பதன் முன் தகரம் வரும். னகரம் முறையே ணகர ளகரமாகி இரட்டும், நிலைமொழிப் பஃது கெடும். வருமொழிப்பத்து, நூறு என்பன கெடும். பத்துக் கூடியவிடத்து ஊகார உயிரும் றகர ஒற்றுடன் கூடிய உகரமும் வரும். நூறு கூடியவிடத்து ஆயிரம் வரும்." என்பர் நேமிநாதர்.

வருமொழிப்பத்தும் நூறும் கெடக் காரணம் இன்மை யானும், தகரமெய் உகரம் முதலியன வர நியாய மின்மையானும் இக் கருத்துப் பொருந்தாதென வே. வேங்கடராஜுலு ரெட்டியார் மறுக்கிறார்.

## நன்னூலார் கருத்து

ஒன்பஃது என்பதுடன் பஃது நூறு என்பவற்றைச் சேர்க்கும்போது வருமொழிகள் முறையே நூறு ஆயிரம்

என முரணும். "நிலைமொழி ஒகரத்துடன் தகரம் கூடும்; பஃது கெடும்; னகர ஒற்று முறையே ணகர, ளகரமாய்த் திரியும்" என்பர் நன்னூலார்.

வருமொழிப்பத்து நூறாகவும், நூறு ஆயிரமாகவும் திரியக் காரணம் இல்லை எனவும், நிலைமொழிப் பஃது ஏன் கெட்டது எனவும் தகரம் ஏன் வந்தது எனவும் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் நன்னூலார் கருத்தை மறுக்கின்றார்.

## கேரள பாணினீய ஆசிரியர் கருத்து

தொண்ணூறு என்பதைத் தொள்+நூறு என்று பிரித்து முன்னுள்ள நூறு (அதாவது நூற்றுக்கு முன்னுள்ளது) என்று கேரள பாணினீய ஆசிரியர் கருதுகிறார்.

இவர் கருத்துப்படி முன்னுள்ளது என்று பொருள்பட வேண்டுமாயின் (தொல்+நூறு) தொன்னூறு, (தொல்+ஆயிரம்) தொல்லாயிரம் என்று வரவேண்டும் என வே. வேங்கடராஜுலு ரெட்டியார் இக் கருத்தையும் மறுக்கின்றார்.

## வேங்கடராஜுலு ரெட்டியார் கருத்து

"விடு என்ற சொல்லுக்கு விள் என்பதும், நடு என்ற சொல்லுக்கு நள் என்பதும் முதனிலையாக இருத்தல் போலத் தொடு என்ற சொல்லுக்குத் தொள் என்பதை முதனிலை யாகக் கொள்ளலாம். எனவே தொண்ணூறு, தொள்ளாயிரம் என்பன முறையே நூறு ஆயிரம் என்பவற்றைத் தொடுவது என்று பொருள் தரலாம்" எனவும், "இதுவும் சிறப்பதாயில்லை" எனவும் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் எழுதியுள்ளார்.

## தேவநேயப்பாவாணர் கருத்து

ஒன்பது என்னும் எண்ணுக்குப் பழம் பெயர் தொண்டு. இதனைத் தொண்டுதலையிட்ட எனத் தொல்காப்பியரும், தொண்டுபடு திவவு எனப்பெருங்குன்றூர் பெருங் கௌசிகனாரும் கையாண்டுள்ளனர். தொண்டு என்னும் சொல் தொல்காப்பியர் காலத்திலேயே அருகி வழங்கத் தலைப்பட்டது. தொல்காப்பியர் காலத்திற்கு முன் தொண்டு, தொண்பது, தொண்ணூறு, தொள்ளாயிரம் என்பன முறையே 9, 90, 900, 9000 என்ற மதிப்புள்ளனவாய் இருந்தன. தொண்டு என்னும் சொல் வழக்கிழந்து போகவே அதன் இடத்தில் பத்தாம் இடப்பெயர் வழங்கத் தலைப்பட்டது. பத்தாம் இடப்பெயரிடத்தில் நூறும் இடப் பெயரும், நூறும் இடப்பெயரிடத்தில் ஆயிரத்தாமிடப் பெயரும் வழங்கத் தலைப்பட்டன. ஆயிரத்தாம் இடத்துக்கு (ஒன்பது + ஆயிரம்) ஒன்பதினாயிரம் எனப் புதுப் பெயர் சேர்க்கலாயிற்று. தொண்டு + பத்து = தொண்பது; தொண்டு + நூறு = தொண்ணூறு; தொண்டு + ஆயிரம் = தொள்ளாயிரம் எனப்புணர்ப்பதே முறைமையாகும். — என்று ஞா. தேவநேயப்பாவாணர் கருதுகின்றார்.

முடிபு: மேற்கண்ட பலர் கருத்துக்களில் தேவநேயப் பாவாணர் கருத்தே பொருத்தமுடைத்தாகக் காணப் படுகின்றது.

121. புணர்ச்சிவிதி தருக: எட்குக்குட்டி, மூழக்கு, தொண்ணூறு, தொள்ளாயிரம், பொதியில்.

## எண்கு + குட்டி = எட்குக்குட்டி

"வன்றொடர் மொழியும் மென்றொடர் மொழியும்
வந்த வல்லெழுத் தொற்றிடை மிகுமே
மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற் றெல்லாம்
வல்லொற் றிறுதி கிளையொற் றாகும்" என்ற விதிப்படி

எண்கு என்னும் மென்றொடர்க் குற்றுகரம், கிளைவல்லொற்றாகும் என்பதனால் எட்கு எனத்திரிந்து, வந்தவல்லெழுத்தொற்றிடை மிகுமே என்பதனால் ஒற்றுமிக்கு எட்குக்குட்டி என முடிந்தது.

மூன்று + உழக்கு = மூழக்கு

இது மரூஉ முடிபு. ஈற்றுக் குற்றுகரமும் அது ஏறி நின்ற மெய்யும் கெட்டு னகரம் வகரமாகி நெடுமுதல் குறுகி முவ் என்று நின்ற முடிபு, "மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே உழக்கென் கிளவி வழக்கத்தான" என்ற விதியால் நீண்டு மூவுழக்கு என்றாயிற்று. இனி, அதுவே மூழக்கு எனவும் மூழாக்கு எனவும் மருவி வரும். இம் மரூஉ முடிபு வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநனவும் என்ற புறனடைச் சூத்திர விதியால் கொள்ளப்படும்.

ஒன்பது + பத்து = தொண்ணூறு

விடை 120-ல் காண்க.

ஒன்பது + நூறு = தொள்ளாயிரம்

விடை 120-ல் காண்க.

பொது + இல் = பொதியில்

இது மரூஉ முடிபாகும். வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும் என்ற அதிகாரப் புறனடைச் சூத்திர விதியால் இது கொள்ளப்படும்.

122. புணரியல் நிலையிடை உணரத்தோன்றா — என்று கூறப்பட்டன யாவை? அங்ஙனம் கூறக் காரணம் என்ன? (1959,1960)

1. உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்
குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்,

2. உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்,

3. செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்யொருங் கியலும் தொழில்தொகு மொழியும்,

4. தம்மியல் கிளப்பின் தம்முன் தாம்வரூஉம்
எண்ணின் தொகுதியும்,

5. பிறவும்,

மருவின் பாத்திய; புணரியல் நிலையிடை உணரத்தோன்ரு.

(எ-டு) 1. விண்விணைத்தது; கார்கருத்தது; ஒல்லொலித்தது. இவற்றில் விண், கார், ஒல் என்பன முறையே குறிப்பு, பண்பு, இசை என்பவற்றை உணர்த்திக் குறைந்த சொல்லாய் விளங்குதலின் விண்விணைத்தது முதலியன மரூஉ முடிபுகள். இவற்றை நிலைமொழி வருமொழியாக வைத்துப் புணர்ச்சி இலக்கணம் கூறவியலாது.

2. கருஞ்சான்ருன்; கருங்குதிரை. இவற்றில் கரும் என்பது பண்பு உணர்த்தி நின்றது. கரியான், கரியது என்பன, கரும் என்று பண்புதொகுமொழியாயிற்று. எனவே கருஞ்சான்ருன் முதலியன மரூஉ முடிபுகள். இவற்றை நிலைமொழி வருமொழியாக வைத்துப் புணர்ச்சி இலக்கணம் கூறவியலாது.

3. கொல்யானை. இதில் கொன்ற, கொல்கிற, கொல்லும் என்ற முக்காலச் சொல்லும் தொக்குக் கொல் என்று தொழில்தொகுமொழியாயிற்று. எனவே கொல்யானை என்பது மரூஉ முடிபு. இதனை நிலைமொழி வருமொழியாக வைத்துப் புணர்ச்சி இலக்கணம் கூறவியலாது.

4. ஒரொன்று. இது, ஒன்று என்பதனுடன் ஒன்று என்பது நின்று தம்முன் தாம் வந்ததாயிற்று. அதுவும் ஒன்றென்று என நில்லாமல் ஒரொன்று என மரூஉ முடிபாயிற்று. ஒன்றுஎன்னும் ஒருசொல்லே நிலைமொழியாயும்

வருமொழியாயும் வருதல் கூடாமையின் இதற்குப் புணர்ச்சி இலக்கணம் கூறவியலாது.

5. பிறவும் என்றதனுல் உண்டான், கரியன் என்பனவும் பகுதி விகுதியாகப் பிரித்துப் புணர்ச்சி இலக்கணம் கூறப்படா என்பது கொள்ளப்படும்.






ஸ்ரீ முருகன் அச்சகம், கும்பகோணம்.

## விலை விபரம்

வித்துவான்தேர்வு வினாவிடை
எண் – 1. ... ரூ. 1—25

அழகர் கிள்ளைவிடுதூது
(உரையுடன்) ... ரூ. 1—00



ஷை நூல்கள் கிடைக்கும் இடம் :—

1. P. V. நாதன் அண் கோ.,
புத்தக வியாபாரம்,
டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம்.

2. ஜெனரல் புக் கம்பெனி,
9, பிரான்ஸிஸ் ஜோசப் தெரு,
சென்னை–1.

3. தா. ம. வெள்ளைவாரணம்,
திருப்பனந்தாள் (P. O.)
தஞ்சை மாவட்டம்.

ஸ்ரீ முருகன் அச்சகம், கும்பகோணம்.